உ

கணபதிதுணை.

# உவமான சங்கிரகமும், இரத்தினச் சுருக்கமும்,

காஞ்சீபுரநிவாஸி
வித்வசிரேஷ்டராகிய
ஸ்ரீமாந் - இராமயோகிகள் அவர்களால்
இயற்றப்பெற்ற
**உரையுடன்.**

---

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1914

விலை அணா 4.

உ

கணபதிதுணை.

# உவமானசங்கிரகம்

## மூலமும் உரையும்.

### காப்பு.

நேரிசை வெண்பா.

வேதத் தமிழ்மாறன் வெற்பனையார் கேசாதி
பாதத் துவமானப் பண்பெல்லாந் — தாதின்
முருகூர் மலர்க்குழலாய் மூதுரையாற் சொல்வன்
குருகூ ரனைத்தொழுது கொண்டு.

(பதவுரை.) தாதில்-மகரந்தத்தில், முருகு-மணமானது, ஊர்-பரவி வீசுகிற, மலர் - மலர்மாலையைச் சூடின, குழலாய் - கூந்தலுடைய மாதே! குருகூரனை-திருக்குருகூரில் அவதரித்தருளின சடகோபனை, தொழுதுகொண்டு - வணங்கிக்கொண்டு, வேதத் தமிழ் - வேதப்பொருளமைந்த தமிழ் வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளின, மாறன்-சடகோபனது, வெற்பு அனையார்-மலையை நிகர்ப்பவராகிய மாதரது, கேசாதி பாதத்து - கேசாதிபாதமாயுள்ள அவயவங்களின், உவமானப் பண்பு எல்லாம் - உவமானப்பொருள்களெல்லாவற்றையும், மூதுரையால் - தொல்லாசிரியர் சொன்ன சொல்முறையாகவே, சொல்வன் - சொல்லலாயினேன், எ-று.

(விசேடவுரை.) வேதத் தமிழ் - வேதார்த்தத்தைத் தன்னுளடக்கிக்கொண்டிருக்கிற தமிழ். சொற்களை முன்பின்னாக மாற்

றித் தமிழ் வேதம் என்றுரைப்பினு மமையும். தமிழ் வேதம்-திருவாய் மொழி மாறன்-ப்ரக்ருதிக்கு மாறுபட்டவன் (ப்ரக்ருதியை வென்ற வன்). சடகோபன் - சடவாயுவை நிராகரித்தவன் (சடவாயுவை வென்றவன்). வேதத் தமிழ் மாறன் வெற்பு தன்னைத் தரிசித்தோர் எல்லார்க்கும் அவரது மநோரதங்கள் யாவையும் தருதல்போல, தம் மைக் காண்போரெல்லார்க்கும் பேரின்பந் தருதலால், 'வேதத் தமிழ் மாறன் வெற்பனையார்' என்றார். கேசாதிபாதம் - கூந்தல்முதல் பாத மீறாயுள்ள அவயவங்கள். உவமானம் - உவமை (ஒப்பு). வேதத் தமிழ் மாறன் வெற்பனையார் கேசாதிபாதத் துவமானப் பண்பெல்லாம் கேட்டற் குரிமைதோன்ற, 'தாதின், முருகூர் மலர்க்குழலாய்' என மகடூஉ முன்னிலையாற் கூறினார். சொல்வன் என்றமையால் நீ கேட் கக்கடவை யென்பது எஞ்சி நின்றது.

---

## கூந்தற்கும், நெற்றிக்கும்.

கொண்டலுங்கூந் தற்பனையுங் கொன்றைக்கா யும்மிருளுந்
தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும்—வண்டினமுந்
தண்குழலை யொப்பாந் தனிவா ணுதற்குநிகர்
வெண்பிறையுஞ் செஞ்சிலையு மே.

(ப-ரை.) கொண்டலும் - மேகமும், கூந்தற்பனையும் - கூந்தற் பனங்காய்க் குலையும், கொன்றைக்காயும் - கொன்றைக்காயும், இரு ளும் - இருட்டும், தண்டலையும் - சோலையும், கார் மணலும்-கருமண லும், சைவலமும்-கொடிப்பாசியும், வண்டு இனமும்-வண்டுக் கூட்ட மும், தண் குழலை ஒப்பு ஆம்-குளிர்ந்த கூந்தலுக்கு நிகராகும்; வெண் பிறையும் - வெள்ளிய பிறையும், செஞ்சிலையும் - செவ்விய வில்லும், தனி - ஒப்பற்ற, வாள் - ஒளியையுடைய, நுதற்கு-நெற்றிக்கு, நிகர் - நிகர்வனவாகிய பொருள்களாம், எ-று.

(வி-ரை.) கொண்டல் என வாளா கூறினாரேனும் கூந்தலை நிகர்க்க வேண்டுதலால் கார்மேகம் என்றுரைத்துக்கொள்க. வெண்பிறை யென்றது பூர்வபக்ஷத்து அஷ்டமி சந்த்ரனை. சைவலம் - வடசொல். இயற்கையாய் நெய்த்ததும் நெய் பூசப்பட்டும் இருத்தலால் கூந்தலைத் 'தண்குழல்' என்றார். (க)

புருவத்திற்கும், கண்ணிற்கும்.

மேவிற் புருவம் விழிக்குவண்டுந் தாமரையுங்
காவியுங் கூற்றம்புங் கருவிளையு—மாவடுவும்
வேலுங் கடலும் விடமுமமுதும் வாளுஞ்
சேலும் பிணையுமிணை செப்பு.

(ப-ரை.) மே - மேன்மையாகிய, வில் - வில்லானது, புருவம் - புருவத்துக்கு நிகராகும்; வண்டும் - கருவண்டும், தாமரையும் - தாமரை மலரின் இதழும், காவியும் - கருங்குவளை மலரின் இதழும், கூற்று அம்பும் - இயமனது அஸ்திரமும், கருவிளையும் - காக்கணம்பூவும், மாவடுவும் - மாம்பிஞ்சும், வேலும் - வேலாயுதமும், கடலும் - சமுத்திரமும், விடமும் - நஞ்சும், அமுதும் - அமிர்தமும், வாளும் - வாளாயுதமும், சேலும் - சேல்மீனும், பிணையும் - பெண்மானும், விழிக்கு - கண்ணுக்கு, இணை - ஒப்புப்பொருள்களாக, செப்பு - சொல்லு, எ - று.

(வி-ரை.) கூற்றம்பும் என்பதனீற்றும்மையைப் பிரித்துக் கூற்றோடுங் கூட்டி யமனும் அம்பும் என்றுரைத்தலுமாம். மாவடு என்றது மாம்பிஞ்சின் பிளவை; இது "மாவடு வகிரன்ன கண்ணி பங்கா" என்றற்றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களால் விளங்கும். (உ)

## முகத்திற்கும், காதிற்கும், கபோலத்திற்கும், மூக்கிற்கும்.

செப்புமுகங் கமலந் திங்கள்கா திற்குவள்ளை
யொப்பரிய கத்தரிகை யூசலா—மப்புநிலை
கண்ணாடி சாணை கபோலங் குமிழ்சாதி
யெண்ணாசி கைக்குவமை யே.

(ப-ரை.) முகம் - முகத்தை, கமலம் - தாமரைமலராகவும், திங்கள் - பூர்ணசந்த்ரனாகவும், செப்பு - சொல்லு; காதிற்கு - செவிக்கு, வள்ளை - வள்ளைத்தண்டும், ஒப்பு அரிய - ஒப்பற்ற, கத்தரிகை-கத்தரிகையும், ஊசல் - ஊசலும், ஆம் - உவமைப் பொருள்களாம்; அப்புநிலை - நீர்நிலையும், கண்ணாடி - கண்ணாடியும், சாணை - சாணைக்கல்லும், கபோலம் - கபோலத்திற்கு உவமைப்பொருளாம்; குமிழ்-குமிழம்பூவும், சாதி - சாதிமல்லிகைப்பூவும், எள்-எட்பூவும், நாசிகைக்கு-மூக்கிற்கு, உவமை - உவமைப்பொருள்களாம், எ-று.

(வி-ரை) முகத்திற்குவமை கூறலால் திங்கள் பூர்ணசந்த்ரனைக் குறித்தது. வள்ளை - வள்ளைத்தண்டு; இது, "உள்ளுங் குரும்பி பொழுகுங் காதை, வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்" என்றம் பட்டணத்தடிகள் திருவாக்கினால் விசதமாம். நீர்நிலை - நிறைநீருள்ள குளம். கபோலம் - கன்னம். நாசிகை-நாஸிகா என்னும் வடசொற்றிரிபு. (ரு)

## இதழ்க்கும், வாய்க்கும், பல்லிற்கும், கழுத்திற்கும்.

ஏப்கிடை கோபந் துப்பிலவு முருக்கிதழாம்
வாய்தமுதம் வீழிதொண்டை வாரிசமாம்—தோய்கழுமுண்

முத்துத் தளவ முருந்தெயிறாங் கந்தரத்தை
நத்துக் கமுகெனவே நாட்டு.

(ப - ரை.) எய் - பொருந்திய, கிடை - நெட்டியும், கோபம் - இந்த்ரகோபப்பூச்சியும், துப்பு-பவளமும், இலவு - இலவம்பூவும், முருக்கு - செம்முருக்கம்பூவும், இதழ் ஆம் - அதரத்திற்கு உவமைப் பொருள்களாம்; குமுதம் - செவ்வல்லிமலரும், வீழி-வீழிக்கனியும், தொண்டை-கோவைக்கனியும், வாரிசம்-தாமரைமலரும், வாய் ஆம்- வாய்க்கு உவமைப்பொருள்களாம்; தோய் கழுமுள்-வடித்த சூலமும், முத்து - முத்தும், தவளம்-முல்லையரும்பும், முருந்து - மயிலிறகின் அடியும், எயிறு ஆம்-பல்லிற்கு உவமைப்பொருள்களாம்; கந்தரத்தை- கழுத்திற்கு, நத்து கமுகு என - சங்கும் கமுகமாமும் உவமைப் பொருள்களாமென்று, நாட்டு - நிலைபெறுத்து, எ-று.

(வி-ரை.) நெட்டி - தக்கை. இந்த்ரகோபம்-பட்டுப்பூச்சி. வாரிசம் - வாரிஜம் என்னும் வடசொற்றிரிபு; இதற்கு நீரிற் பிறப்பதென்பது பொருள். கந்தரம் - வடசொற்றிரிபு; இதற்கு சிரசைத் தாங்கிக்கொண்டிருப்பது என்பது பொருள். (௪)

## மொழிக்கு.

நாட்டுங் கதலி நடுக்கரும்பு மாவருக்கை
காட்டுங் குயில்கிள்ளை கற்கண்டு—வேட்டருந்துஞ்
சீனி சருக்கரைசெந் தேனமுதம் பால்குழல்யா
[illegible]னபுதி னுன்குமொழிக் காம்.

கரும்பு - நடுக்கரும்பும், மா-மா[illegible]டுகிற வாழைக்கனியும், நடுக் காட்டும் குயில் - குரல்தோற்றுவிக்கிற குயிலோசையும், [illegible]யும், மொழியும், கற்கண்டு - கற்கண்டும், வேட்டு அருந்தும் - விரும்பி

யுண்பதற்குரிய, சீனிசருக்கரை - சீனிசர்க்கரையும், செந்தேன்-செந்தேனும், அமுதம் - அமிர்தமும், பால் - பாலும், குழல் - புள்ளாங்குழலோசையும், யாழ் - யாழோசையும், ஆன - ஆகிய, பதினுன்கும் - பதினுன்கு பொருள்களும், மொழிக்கு - சொல்லுக்கு, ஆம் - உவமைப் பொருள்களாம், எ-று.

(வி-ரை.) வித்திப்பயிர்செய்வ தன்றென்றற்கு 'நாட்டுங்கதலி' என்றார். கரும்பி னடுவிடம் சுவை மிகுதியுடைத் தென்றற்கு 'நடுக்கரும்பு' என்றார். அமுதம்-அம்ருதம் என்னும் வடசொற்றிரிபு; இதற்கு மரணத்தைத் தவிர்ப்பது என்பது பொருள். (ரு)

தோளிற்கும், முன்கைக்கும், அங்கைக்கும்,
கைவிரற்கும், கைந்நகத்திற்கும்.

காம்புகழை தோளிணைமுன் கைமகர யாழாகுந்
தேம்பதும மாந்தளிர்பூஞ் செங்காந்தள் —யாம்புகல்வோ
மங்கை விரல்கெளிறு மவ்விரலின் கூருகிர்க்குப்
பைங்கிளிமூக் கென்றுவமிப் பாம்.

(ப-ரை.) காம்பு-மூங்கிலும், கழை-கரும்பும், தோள் இணை-இரண்டு தோள்களுக்கு உவமைப்பொருள்களாம்; முன் கை - முன்னங்கைக்கு, மகரயாழ் - மகரவீணை, ஆகும் - உவமைப்பொருளாம்; அங்கை - அங்கைக்கு, தேம் பதுமம் - மணமுள்ள தாமரை மலரும், மாந்தளிர் - மாந்தளிரும், செங்காந்தள்பூ - செங்காந்தட்பூவும் நிகராமென்று, யாம் புகல்வோம்-யாம் கூறுவோம்; விரல் - கைவிரலுக்கு, கெளிறு - கெளிற்றுமீன், ஆம் - உவமைப்[illegible]த்தற்கு, அந்த விரலின் [illegible] பைங்கிளியின் மூக்கென்று, உவமிப்பாம் - உவமை கூறுவோம், எ-று,

(வி-ரை.) அங்கை - அகங்கை (உள்ளங்கை). உகிர்-நகம். (சு)

கொங்கைக்கும், அக்கொங்கைக்கண்ணிற்கும்,
உதரத்திற்கும், உந்திக்கும், மடிப்பிற்கும்.

பாங்கரும்பு சூதுகிண்ணம் பைங்குரும்பை செப்புமுடி
கோங்கரும்பு தாளங் குமிழிசிமிழ்—பூங்கமலம்
பம்பரம் வெற்பிளநீர் பந்துசகோ ரங்கலசங்
கும்பமருப் பியானை குடம்.

(ப - ரை.) பாங்கு அரும்பு சூது - அழகுண்டாகிய சொக்கட்டான் காய், கிண்ணம் - வட்டில், பை குரும்பை - பசிய குரும்பை, செப்பு - செப்பு, முடி - கிரீடம், கோங்கு அரும்பு - கோங்கமொட்டு, தாளம் - கைத்தாளம், குமிழி - நீர்க்குமிழி, சிமிழ் - பரணை, பூங்கமலம் - அழகாகிய தாமரை யரும்பு, பம்பரம்—, வெற்பு - மலை, இளநீர்—, பந்து—, சகோரம் - சகோரப்புள், கலசம் - கலயம், கும்பம் - யானை மத்தகம், யானை மருப்பு - யானைக்கொம்பு, குடம்—, எ-று.

குடமுதனாலைந்துமணிக் கொங்கைகண் ணீலம்
வடமுதா முந்தி மகிழம்பூ—படர்சுழியா
மேறும் படியு மெறிநீர்த் தடந்திரையுங்
கூறும் மடி படிப்புக் கொள்.

(ப-ரை) குடமுதல் - குடமுதலாகிய, நாலைந்து - இருபதும், மணி - அழகிய, கொங்கை - தனத்திற்கு உவமைப்பொருள்களாய்; கண்-கொங்கைக் கண்ணிற்கு, நீலம் - நீலமணி உவமைப்பொருளாய்; உதரம் - வயிற்றுக்கு, வடம் - ஆலிலை உவமைப்பொருளாம்; உந்தி-நாபிக்கு, மகிழம்பூ-மகிழம்பூவும், படர்சுழி-பரந்த நீர்ச்சுழியும், ஆம்-உவமைப்பொருள்களாய்; ஏறும்படியும் - ஏறுதற்குரியபடியும், நீர் - நீரிலுண்டாகி, எறி - வீசுகிற, தடம் திரையும் - பெரிய அலையும்,

கூறும் - சொல்லப்படுகிற, படி மடிப்பு - படிந்த மடிப்புக்கு, கொள்- உவமைப்பொருள்களாகக் கொள்ளக்கடவை, எ-று.

(வி - ரை.) சூதாடு கருவி - சொக்கட்டான்காய். குரும்பை - தென்னம்பிஞ்சு. நாபி - கொம்பூழ். (அ)

உரோமக்கோடிக்கு.

கொண்டவுரோ மக்கோடிக்கே யெறும்போ ழுக்கும்
வண்டொழுக்குங் காஞ்சி மணிச்சுடருங்—கண்டகர்காற்
சங்கிலியும் வேழத் தறியுஞ் சலாகையுநீள்
பங்கயத்தி னாளமும்வைப் பார்.

(ப - ரை.) கொண்ட - அடைந்திருக்கிற, உரோமக்கோடிக்கு- ரோமரேகைக்கு, எறும்பு ஒழுக்கும் - எறும்பின்தொடரும், வண்டு ஒழுக்கும் - வண்டின்தொடரும், காஞ்சிமணி சுடரும் - காஞ்சிமணி யின் ஒளியும், கண்டகர் - துஷ்டரது, கால் - காலிற் பூட்டப்பட்ட, சங்கிலியும் - விலங்கும், வேழம் தறியும் - யானையின் கட்டுத்தறியும், சலாகை - இருப்புச்சலாகையும், நீள் - நீண்ட, பங்கயத்தின் நாள மும் - தாமரைத்தண்டும், (ஆகிய இவற்றை) வைப்பார் - உவமைப் பொருள்களாக வைத்துச் சொல்லுவர் (புலவர்), எ-று.

(வி - ரை.) காஞ்சி-மாதரிடையணியிலொன்று; இது மணியி னாற் செய்யப்படுவது. தறி - கட்டுக்கம்பம். சலாகை - இருப்புக் கம்பி. பங்கயம் - பங்கஜம் என்னும் வடசொற்றிரிபு; இதற்கு, சேற்றிற் பிறப்பதென்பது பொருள்; பங்கம்-சேறு, ஜம்-பிறப்பது.

இடைக்கு.

பாரி லிடைக்கரவும் பைங்கொடியும் பூங்கொம்பு
மார னுடம்பும் வகிரிழையு—நேர்கைப்

பிடியளவுந் தேய்ந்த பிறைக்கொழுந்து மின்னுந்
துடியளவுங் கோளரியுஞ் சொல்.

(ப - ரை.) பாரில்-உலகத்தில், இடைக்கு-இடுப்புக்கு, அரவும்-பாம்பும், பைங்கொடியும் - பச்சைக்கொடியும், பூங்கொம்பும் - பூங்கொடியும், மாரன் உடம்பும் - மன்மதனது உருவமும், வகிர் இழையும்-பிளந்தநூலிழையும், நேர் - நேராகிய, கைப்பிடி அளவும் - கைப்பிடியினளவும், தேய்ந்த - குறைந்த, பிறைக்கொழுந்தும் - இளம்பிறையும், மின்னும் - மின்கொடியும், துடி அளவும் - உடுக்கையினளவும், கோள்-துன்பஞ்செய்தற்குரிய, அரியும்-சிங்கமும், (ஆகிய இவற்றை) சொல் - உவமைப்பொருள்களாகச் சொல், எ-று.

(வி - ரை) மாரனுடம்பு - அருவம் (உருவமின்மை). அரி - சிங்கம். (௧௦)

அல்குற்கும், பெண்குறிக்கும்.

* சொல்லிய வல்குற் சுணையோ டரசிலையுஞ்
சில்லியும் பொற்கொடிஞ்சித் தேர்த்தட்டும்—வல்லரவு
மண்குறிக்குஞ் சிற்றுல வட்டமும் பட்டமுமாம்
பெண்குறிக்கு மான்குளம்பைப் பேணு. (௧௧)

தொடைக்கும், முழங்காலிற்கும்,
கணைக்காலிற்கும்.

பேணுங் கதலி பிடிக்களிற்றின் கைக்குறங்காம்
பூணு முழந் தாளலவன் போலுமே—வேணுவுடன்
சோகமுறு மம்புபெய் தூணியும் வாற்கன்றுங்
காகளமும் போன்றகணைக் கால்.

---

* இப்பாடல் ஸ்திரீ வருணனையாயிருப்பதால் இதற்கு உரை எழுதப்படவில்லை.

(ப - ரை.) பேணும் - விரும்பப்படுகிற, கதலி - வாழைத்தண்டு, பிடிக்களிற்றின் கை - பெண்யானையின் துதிக்கை, (ஆகிய இரண்டும்) குறங்கு ஆம் - தொடைக்கு உவமைப்பொருள்களாம்; பூணும் - உடைத்தாயிருக்கிற, முழந்தாள் - முழங்காலுக்கு, அலவன் - நண்டானது, போலும்-உவமைப்பொருளாம்; கணைக்கால் - கணைக்காலிற்கு, வேணுவுடன் - மூங்கிலோடு, சோகம் - துன்பத்தை, உறும்-மிகுவிக்கிற, அம்புபெய் தூணியும் - அம்புப்புட்டிலும், வரால் கன்றும் - இளவரால் மீனும், காகளமும்-ஊதுகொம்பும், (ஆகிய இவையாவும்) போன்ற - ஒத்திருப்பனவாகிய உவமைப்பொருள்களாம், எ-று. ()

பரட்டிற்கும், குதிக்கும், புறவடிக்கும்,
கால்விரற்கும்.

காலிற் பரடிரண்டுங் கைத்தாச சொக்குமிரு
காலிற் குதிமதிக்குங் கந்துகமா—நூலெழுது
புத்தக மாமை புறவடியொப் பாந்திரண்ட
வித்துருமம் போலும் விரல்.

(ப - ரை.) கைத்தாசு-சிறுதராசானது, காலில் - காலிலுள்ள, பரடு இரண்டும் - இரண்டு பரடுகளையும், ஒக்கும் - நிகர்க்கும்; இருகாலில் குதி - இரண்டு கால்களிலுள்ள குதிகளை, மதிக்கும் - மதிக்கப்படுகிற, கந்துகம் - பந்தானது, ஆம் - நிகர்த்திருக்கும்; புறவடி - புறவடிக்கு, நூல் எழுது - நூல்கள் எழுதத்தகுந்த, புத்தகம்-புத்தகமும், ஆமை - ஆமையும், ஒப்பு ஆம் - நிகராகும்; விரல் - கால்விரல்களை, திரண்ட - திரட்சியாகிய, வித்துருமம்போலும் - பவளமானது ஒத்திருக்கும், எ - று.

(வி-ரை.) கைத்தராசு என்பதில், கை சிறுமைப்பண்பு குறித்த சொல்; இது, "அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்"

என்னும் சான்றோ ரிலக்கியத்தால் இனிது விளங்கும். வித்துருமம் - வித்ருமம் என்றும் வடசொற்றிரிபு. (கரு)

காலினகத்திற்கும், காலிற்கும்.

விரற்பவளங் கூருகிர்க்கு வெண்பிறையு முத்து
நிரைக்கழுநீர்ச் செவ்விதழு நேராம்—பரப்பியல்கா
லஞ்சநறுந் தூவி யனிச்சமசோ கங்கமலம்
பஞ்சிலவு மாந்தளிரொப் பாம்.

(ப-ரை.) வெள் பிறையும் - வெண்மையாகிய பிறைமதியும், முத்தும்—, நிரை-வரிசையாகிய, கழுநீர் - கழுநீர்மலரின், செவ்விதழும்-செவந்த இதழும், பவளம் விரல்-பவளம்போலும் விரலிலுள்ள, கூர் உகிர்க்கு - கூர்மையாகிய நகத்திற்கு, நேர் ஆம்-நிகராகும்; அஞ்சம் - அன்னப்பறவையின், நறு தூவி - அழகாகிய மயிரும், அனிச்சம்-அனிச்சம்பூவும், அசோகம் - அசோகம்பூவும், கமலம்-தாமரைமலரும், பஞ்சு-செம்பஞ்சும், இலவு - இலவம்பூவும், மாந்தளிர் மாந்தளிரும், பரப்பு இயல் கால் - விரிவாகிய காலினை, ஒப்பு ஆம்-நிகர்க்கும் பொருள்களாம், எ-று.

(வி-ரை.) முத்து-முக்தம் என்னும் வடசொற்[illegible], அஞ்சம்-ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபும்; [illegible]மம்-வடமொழித்தற்சமம்; இதற்கு, நீரை அ[illegible]தனைப்பது பொருள். (கசு)

நடைக்கும், சாயற்கும், மேனிக்கும், தேமலுக்கும்.

பாயற் பிடிவேழம் பைந்தூவி யன்னநடை
சாயற்கு மின்னமுதந் தான்மயிலாஞ்—சேயிழையாய்
மாந்தளிர்பூஞ் சண்பகப்பூ மாமேனி யம்மேனி
பூந்திதலை வேங்கைபசும் பொன்.

(ப-ரை.) சேயிழையாய் - மாதே! பாயல் - பாய்ந்து செல்லுகிற, பிடி வேழம் - பெண்யானையும், பைந்தூவி - பசுமையாகிய மயிரையுடைய, அன்னம் - அன்னப்பறவையும், நடை - நடைக்கு உவமைப் பொருள்களாம்; இன் அமுதம் - இனிய அமிர்தமும், மயில்-மயிலும், சாயற்கு ஆம் - சாயற்கு நிகராகும்; மாந்தளிர் - மாந்தளிரும், பூ - அழகாகிய, சண்பகப்பூ - சண்பகப்பூவும், மா மேனி - அழகாகிய சரீரத்துக்கு உவமைப்பொருள்களாம்; வேங்கை-வேங்கைப்பூவும், பசும் பொன் - பசும்பொன்னும், அ - அந்த, மேனி - சரீரத்திற் படர்ந்திருக்கிற, பூ - அழகாகிய, திதலை - தேமலுக்கு நிகராகும், எ-று.

(வி-ரை.) சண்பகம் - சம்பகம் என்னும் வடசொற்றிரிபு. சேயிழை - அன்மொழித்தொகை; இதற்கு செவ்விய தொழில் முற்றிய ஆபரண மணிந்த மாதே யென்பது பொருள். (கரு)

## உவமானசங்கிரகம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.



உ

கணபதி துணை.

# இரத்தினச்சுருக்கம்.

## மூலமும் உரையும்.

---

### பிறிவாற்றுமைக்குரிய குறிகள்.

கட்டளைக்கலித்துறை.

சோருந் துகிலும் வளைகலை நாணுந் துணிந்துமட
லூருந் தொழிலு மொளிகூர் பசலையு மோடரிக்கண்
ணீருங் கிழியும் பருமணற் கூடலு நின்றாற்று
மூருந் தனியு மறைபோன நெஞ்சமு முண்டென்பரே.

(பதவுரை.) சோரும் துகிலும் - நழுவின ஆடையும், வளை - வளையலோடு, கலை நாணும் - நீங்கின நாணமும், துணிந்து - மன வுறுதிகொண்டு, மடல் ஊரும் தொழிலும் - மடலூரும் வேலையும், ஒளி கூர் பசலையும் - ஒளி மிகுந்த பசப்பும், ஓடு அரி கண்ணீரும் - படர்ந்த அரிகளையுடைய கண்ணின் நீரும், கிழியும் - கிழியெழுத லும், பரு மணல் கூடலும் - பெரிய மணற்சுழிகளும், நின்று ஆற்றும் ஊரும் - நின்று ஆற்றுகின்ற ஊரும், தனியும் - தனிமையும், அறைபோன நெஞ்சமும் - உள்ளறுக்கப்பட்ட மனமும், உண்டு என்பர் - உண்டென்று சொல்லுவர் (அறிஞர்), என்றவாறு.

(விசேடவுரை.) பசப்பு - நிறவேறுபாடு, இதனை மாமையென் றுங் கூறுவர்; வடநூலார் வைவர்ண்யம் என்பர். ஆற்றல் - அலர்

தூற்றல். உண்டென்பர் என்னும் பயனிலைக்கேற்ற எழுவாயாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (க)

உண்ணுது வள்ளத் தமுதமு மூசலுங் கந்துகமு
நண்ணு வியல்பு நடுக்கமுஞ் சோபமு நாள்பலவு
மண்ணுத மேனியும் வாரா வுறக்கமு மாசுடையும்
புண்ணுன நெஞ்சும் புகைதா முயிர்ப்பும் பொரிமுத்துமே.

(ப - ரை.) வள்ளத்து அமுதமும் - வட்டிலிலுள்ள பாலையும், உண்ணுது - குடிக்காது, ஊசலும்-ஊசலாட்டத்தையும், கந்துகமும் - பந்தாட்டத்தையும், நண்ணு - விரும்பாத, இயல்பும் - இயற்கையும், நடுக்கமும் - நடுங்குதலும், சோபமும் - ஆயாசமும், நாள் பலவும் மண்ணுத மேனியும்-பலநாளளவும் கழுவாத உடம்பும், வாரா உறக்கமும்-நித்திரையில்லாமையும், மாசு உடையும் - அழுக்குத்துணியும், புண் ஆன நெஞ்சும் - புண்பட்ட மனமும், புகை தாழ் உயிர்ப்பும் - புகைந்தெழுகிற நெட்டுயிர்ப்பும், பொரி முத்தும்-பொரிந்த முத்தும் (உண்டென்று சொல்லுவர் அறிஞர்), எ-று.

(வி-ரை.) வள்ளம் - கிண்ணம். கந்துகம் - பந்து. நெட்டுயிர்ப்பு-பெருமூச்சு. பொரிதல் - வெடித்தல். (உ)

பகை.

முத்துங் களபமுந் தண்பனி நீரு முயங்குமலர்த்
தொத்துங் குளிரியுந் தூய்மலர்ப் பாயலுஞ் சூழ்ந்துபுறங்
கத்துங் கடலுங் கதலியு மாவியுங் கங்குலுமிப்
பத்தும் பெரும்பகை யாய்விட்ட வாமொரு பைந்தொடிக்கே.

(ப-ரை.) முத்தும்—, களபமும்-கலவைச்சந்தநமும், தண் பனி நீரும் - குளிர்ந்த பனிநீரும், முயங்கும் - முயக்கத்துக்குரிய, மலர்த்

தொத்தும் - பூந்தொத்தும், குளிரியும் - தட்டையும், தூ மலர்ப்பாயலும் - பரிசுத்தமான புஷ்பசயநமும், புறம் சூழ்ந்து கத்தும் கடலும் - புறத்தே வளைந்து இரைகின்ற சமுத்திரமும், கதலியும் - வாழைக் குருந்தும், ஆலியும் - நீர்த்துளியும், கங்குலும் - இராக்காலமும், (ஆகிய) இ-இந்த, பத்தும் - பத்துப் பொருள்களும், ஒரு பைந்தொடிக்கு - ஒரு பெண்ணுக்கு, பெரும்பகை ஆய்விட்ட ஆம் - பெரிய விரோதிகளாய்விட்டனவாம், எ-று.

(வி-ரை.) தட்டை - கவண்கற்புடைப்பு. பைந்தொடி - பசும்பொன்வளையலணிந்த மாது; இதனை அன்மொழித்தொகை யென்பர். (௯)

நீக்கல்.

நேரிசைவெண்பா.

தொடியும் பலகலனுந் தூய்கச்சு முத்துங்
கடிகமழ்தா ரும்புனையாள் கால—விடமனைய
சேல்விழிக்கு மையுந் திலகநுதற் குங்குறியாள்
சாலமுடி யாளளகந் தான்.

(ப-ரை.) தொடியும் - வளையலும், பலகலனும்-பல ஆபரணங்களும், தூ கச்சும்-பரிசுத்தமான கச்சும், முத்தும் - முத்தும், கடி கமழ் தாரும் - வாசனை வீசுகின்ற மலர்மாலையும், புனையாள் - தரிக்கமாட்டாள்; விடம் அனைய - நஞ்சுபோன்ற, சேல்விழிக்கு - சேல்போலும் கண்ணுக்கு, மையும் - அஞ்சனமும், நுதற்கு - நெற்றிக்கு, திலகம் - பொட்டும், குறியாள் - எழுதமாட்டாள்; அளகம் - கூந்தலும், சால - மிகுதியாய், முடியாள் - முடிக்கமாட்டாள், எ-று.

(வி-ரை) கச்சு-முலைமுக மறைக்கும்படி யுடுத்தும் சிறு சஞ்சுகம் குறித்தல் - எழுதுதல். அளகம் - வடசொல். (௰)

தானே கழங்கம்மனை தண்சுனைநீ ராடாள்
கானே ரிசைபயிலாள் கைக்கிளியு—மானினமும்
பூவையையும் போற்றாள் பொருந்தவே பாங்கியருக்
கேவல்புரி யாள்களிப்ப தென்று.

(ப-ரை.) தானே - தானாகவே, கழங்கு அம்மனை தண் சுனை நீர் ஆடாள் - கழங்கும் அம்மனையும் குளிர்ந்த சுனைநீரும் ஆடமாட்டாள்; கான் ஏர் இசை பயிலாள் - கானமும் அழகும் உள்ள இசையையும் பழகமாட்டாள்; கை கிளியும் - முன்கையில் வைத்து வளர்க்கிற கிளியும், மான் இனமும் - மான்கன்றின் கூட்டமும், பூவையையும் - நாகணவாய்ப்புள்ளும், போற்றாள் - வளர்க்கமாட்டாள்; பொருந்தவே - பொருத்தமாகவே, பாங்கியருக்கு - தோழிமாருக்கு, ஏவல் புரியாள் - கட்டளையிடாள்; (இவ்வாறாகிய இவள்) களிப்பது என்று - மகிழ்ந்திருப்பது எந்நாள், எ-று.

(வி - ரை.) கழங்கு - ஏழாங்காய். அம்மனை-சிறுபந்து. கானம் கான் என ஈறு குறைந்துநின்றது. பூவை-நாகணவாய்ப்புள்; இதனை 'மைநா' என்று வழங்குவர். ஏவல் புரியாள் என்றது கட்டளையிட மாட்டாள் என்றபடி. என்று என்னும் வினா ஒருநாளுமில்லை என்றவாறு. (ரு)

## துயர்க்கேது.

தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்குங் கோகிலத்துக்
கன்றிற் சுமைக்காழிக் கம்புலிக்கு—நின்றாற்று
மன்னைக்கு மாரற் கயர்ந்தாளென் றன்னமே
யென்னைக்கு மாறற் கியம்பு.

(ப-ரை.) அன்னமே-அன்னமே! தென்றற்கும்-தென்றற்காற்றுக்கும், வீணைக்கும் - வீணாகானத்துக்கும், சேமணிக்கும் - விடை

மணிக்கும், கோகிலத்துக்கு - குயிலுக்கும், அன்றிற்கு - அன்றிற் பறவைக்கும், அமைக்கு - வேய்ங்குழலோசைக்கும், ஆழிக்கும் - கடலோசைக்கும், அம்புலிக்கும் - சந்திரனுக்கும், நின்று அாற்றும் அன்னைக்கும் - நின்று இரைகின்ற தாய்க்கும், மாரற்கு - மன்மதனுக்கும், அயர்ந்தாள் என்று - சோர்வடைந்தாளென்று, என் - எனது, ஐ - அழகிய, குமாரற்கு - குமாரக்கடவுளுக்கு, இயம்பு - சொல்லக்கடவை, எ-று.

(வி - ரை.) வீணைகானம் - வீணையோசை. சே - எருது, விடையென்பதும் அது; எருதின் கழுத்திற் கட்டப்பட்டிருக்கிற வெண்கல மணியோசையும் விரகிகளுக்குத் துன்பம் விளக்குமென்றற்குச் சேமணியையும் துயர்க்கேதுப் பொருள்களி லொன்றாக் கூறப்பட்டது. கோகிலம், அன்றில், அமை, ஆழி என்பன அவற்றின் ஓசைகட்காயின. அம்புலியென்பது அதன் நிலவைக் குறித்தது. என்னையென்பதனை என், ஐ எனப் பிரித்து என்னிறைவன் எனக் கூறிக் கோடலுமாம். கோகிலம் - வடசொல். (௬)

## தூது.

இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
பயம்பெறுமேகம் பூவை பாங்கி—நயந்தகுயில்
பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே
தூதுரைத்து வாங்குந் தொடை.

(ப - ரை.) இயம்புகின்ற காலத்து - சொல்லுகின்றகாலத்தில், எகினம் - அன்னப்பறவை, மயில் - மயூரம், கிள்ளை - கிளி, பயம் பெறு மேகம்-நீர்முகந்தமேகம், பூவை-நாகணவாய்ப்பறவை, பாங்கி-தோழி, நயந்த குயில் - விரும்பப்பட்ட குயில், பேதை-பெண், நெஞ்சம் - மனம், தென்றல்-தென்றற்காற்று, பிரமரம் - வண்டு, (ஆகிய) ஈர் ஐந்தும் - (இந்தப்) பத்தும், தூது உரைத்து - தூது சொல்லி, தொடை வாங்கும் - மாலைவாங்கிவரும் பொருள்களாம், எ-று.

(வி - ரை.) மயூரம் - வடசொல்; பயம் என்றதும் அது. பிரமரம் - ப்ரமரம் என்னும் வடசொற்றிரிபு. தொடுக்கப்படலால் மலர் மாலையைத் 'தொடை' என்றார். (எ)

மன்மதனுக்குரிய மாலை முதலியன.

தொடையிலஞ்சி மஞ்சளிளஞ் சோலைபடை வீடு
படைமங் கையர்கமுகம் பாளை—யிடுகவரி
காளாஞ்சி மல்லிகையாங் காரிகையீர் மாரனுக்கு
வாளாமோ லைப்பூவு மால்.

(ப - ரை.) மாரனுக்கு - மன்மதனுக்கு, தொடை - மாலையாயிருப்பது, இலஞ்சி - மகிழமாலையும், மஞ்சள் - மஞ்சள்மாலையுமாம்; படை வீடு-படைவீடாயிருப்பது, இளஞ்சோலை - இளஞ்சோலையாம்; படை-சேனையாயிருப்பது, மங்கையர் - பெண்கள் கூட்டமாம்; இடு கவரி - அசைக்கப்படுகிற சாமரமாயிருப்பது, கமுகம்பாளை - கமுகங் குலையாம்; காளாஞ்சி - படிகமாயிருப்பது, மல்லிகையாம்-மல்லிகைப் பூவாம்; வாள் - வாளாயிருப்பது, ஓலைப்பூ - ஓலைப்பூவாம், எ-று.

(வி - ரை.) படைவீடு - கூடாரம். மங்கையர் - பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. காரிகையீர்-மகடூஉ முன்னிலை.

ஆலைக் கரும்புசிலை யைங்கணைபூ நாண்சுரும்பு
மாலைக் கிளிபுரவி மாருதந்தேர்—மேவலை
கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங்
கொடிமகரந் திங்கள் குடை.

(ப - ரை.) சிலை - வில்லாயிருப்பது, ஆலைக்கரும்பு - ஆலைக் கரும்பாகும்; ஐங்கணை - ஐந்து பாணங்களாயிருப்பன, பூ - மலர்களாம்; நாண் - நாணாயிருப்பது, சுரும்பு-வண்டாம்; புரவி-குதிரையா

யிருப்பது, கிளி மாலை - கிளிவரிசையாம்; தேர் - தேராயிருப்பது, மாருதம்-தென்றற்காற்றும்; கடி முரசம்-விளக்கமாகிய பேரிகையா யிருப்பது, வேலை-சமுத்திரமாம்; களிறு-யானையாயிருப்பது, கங்குல்-இருளாம்; காளம் - காளமாயிருப்பது, குயில் - குயிலாம்; கொடி - கொடியாயிருப்பது, மகரம்-மகரமீனும்; குடை - குடையாயிருப்பது, திங்கள் - முழுமதியாம், எ-று.

(வி - ரை.) ஐங்கணைபூவென்றது தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், கருங்குவளைமலர் என்பவற்றை. மாருதம் - காற்று; அது ஈண்டைக்கேற்பத் தென்றற்காற்றைக் குறித்தது. வேலை - வேலா என்னும் வடசொற்றிரிபு. மகரம் - ஓர்வகை மீன். திங்கள் - சந்திரன்; அது இவ்விடத்துக்கேற்ப முழுமதியை யுணர்த் திற்று; இதனை பூர்ணசந்த்ரன் என்பர் வடநூலார். காரிகையீர் என்றது மகடூஉ முன்னிலை. (க)

## மன்மதன் கணை.

குடைகவித்த நன்கஞ்சங் கோதறுசூ தப்பூ
கடியுமசோ கந்தளவு காவி—படையெடுத்து
வாங்காச் சமர்விளைக்கு மாரனுக்கெப் போதுமங்கை
நீங்காக் கணையா நினை.

(ப - ரை.) குடை கவித்த-குடைபோலமலர்ந்து மூடிக்கொண் டிருக்கிற, நல் கஞ்சம்-அழகாகிய தாமரைமலர், கோது அறு சூதப்பூ-குற்றமற்ற மாமலர், கடியும் அசோகம் - மணக்கின்ற அசோகமலர், தளவு-முல்லைமலர், காவி-நீலோத்பலமலர், (ஆகிய இவைகள்) படை எடுத்து - சேனையெடுத்து, வாங்கா - பின்வாங்காத, சமர் விளைக்கும் - போர் செய்கிற, மாரனுக்கு - மன்மதனுக்கு, எப்போதும் - எப்பொழுதும், அங்கை நீங்கா கணையா - அங்கையை விட்டிராத பாணங்களாக, நினை - நினைக்கக்கடவை, எ - று.

(வி-ரை.) கவித்தல் - மூடுதல். கஞ்சம், சூதம், அசோகம் என்பன வடசொற்கள். சமர் - ஸமரம் என்னும் வடசொற்றிரிபு. (௧௦)

கணைச்செயல்.

நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ
வனைத்துணவு நீக்கு மசோகு—வனத்திலுறு
முல்லைகிடை காட்டு மாதே முழுநீலங்
கொல்லுமத னம்பின் குணம்.

(ப-ரை.) மாதே - பெண்ணே! அரவிந்தம் - தாமரைமலர்க்கணை, நினைக்கும்-நினைப்பூட்டும்; மாம்பூ-மாமலர்க்கணை, நீள் பசலை-மிக்க பசலைநிறத்தை யுண்டாக்கும்; அசோகு - அசோகமலர்க்கணை, அனைத்து உணவு நீக்கும்-உணவு முழுதும் ஒழித்துவிடும்; வனத்தில் உறும் முல்லை - காட்டில் மிக்கிருக்கிற முல்லைமலர்க்கணை, கிடை காட்டும்-படுக்கவைக்கும்; முழுநீலம்-கருங்குவளை மலர்க்கணை, கொல்லும் - கொன்றுவிடும், (இவைகளே) மதன் அம்பின் குணம்-மன்மத பாணங்களின் குணங்களாம், எ - று.

(வி-ரை.) மாதே யென்றது மகரஉமுன்னிலை. காடாகு முல்லை என்பதனால் 'வனத்திலுறு முல்லை' என்றார்; இது சிறுபான்மை மற்றை நிலங்களிலு முண்டாதலு முண்டு. முழுநீலம் என்றதனால் வேறுநிறக் கலப்பின்மை விளங்குகின்றது. (௧௧)

கண்ணினியல்பு.

குணமுங் கதமுங் கொடுந்தொழிலு மன்பின்
கணமுங் குடியிருப்பாக் காட்டு—மிணையாய்த்
துடிக்குஞ் சுழலுஞ் சுருட்டு மன்பருள்ளங்
குடிக்குமரு ராகவஞ்சங் கூர்ந்து.

(ப - ரை.) குணமும் - குணத்தையும், கதமும் - கோவத்தையும், கொலைத்தொழிலும்-கடுஞ்செய்கையையும், அன்பின் கணமும் - அன்பின் மிகுதியையும், காட்டும் - காண்பிக்கும், இணையாய் துடிக்கும் - இணைந்து துடிக்கும், சுழலும் - சுழலாநிற்கும்; சுருட்டும் - சுருட்டாநிற்கும், அன்பர் உள்ளம் குடிக்கும் - காதலரது மனமாகிய நீரைப் பருகாநிற்கும், அநுராகவஞ்சம் கூர்ந்து - ஆசையும் வஞ்சனையும் மிகுந்து, எ-று.

(வி - ரை.) கணம்-கூட்டம்; அது இங்கு மிகுதிப்பொருளது. குடிக்கும் என்னும் வினைக்கேற்ப அன்பருள்ளம் நீராக்கி யுரைக்கலாயிற்று. கூர்தல் - மிகுதல். (கஉ)

வஞ்சங் கொலைபோர் மதனாகமம் விரகந்
துஞ்சுங் களவு சுகங்கலக—மஞ்சனமென்
செம்மைவெளுப் புக்கறுப்புச் செவ்வரிநீ லம்பெருமை
வெம்மைமதர்ப் புக்கடைக்கண் வேல்.

(ப-ரை.) வஞ்சம் - வஞ்சனை, கொலை-கொல்லல், போர் மதன் ஆகமம் - போர் செய்தற்குரிய மதனாகமம், விரகம் - காமம், துஞ்சும் களவு - பொய்த்துயில், சுகம் - இன்பம், கலகம்-கலாபனை, அஞ்சனம் - மை, மெல் செம்மை-இளஞ்சிவப்பு, வெளுப்பு - வெண்மை, கறுப்பு-கருமை, செவ்வரி - செவந்தரேகை, நீலம் - நீலநிறம், பெருமை - பெருமை, வெம்மை - வெப்பம், மதர்ப்பு - மதர்த்தல், (ஆகிய இவை யாவும்) கடைக்கண் வேல் - வேல்போலுங் கடைக்கண்ணின் குணங்களாம், எ-று.

(வி-ரை.) மதனாகமம் - மதநசாத்திரம் (கொக்கோகம்). துஞ்சல் - தூங்கல். மதர்ப்பு - செழிப்பு. (கங)

## கண்ணிற்கிணை.

வேல்வாள் கணைவண்டு வேலை விடமமுதஞ்
சேல்பங் கயங்குடங்கை செங்காவி—காலன்
வடுமான் கருவிளையை வண்சகோ ரத்தை
யடுமாங் குழையை யடர்ந்து.

(ப - ரை.) வேல் - வேலும், வாள் - வாளும், கணை - அம்பும், வண்டு - வண்டும், வேலை-கடலும், விடம் - நஞ்சும், அமுதம்-அமிர்தமும், சேல் - சேல்மீனும், பங்கயம் - தாமரைமொட்டும், குடங்கை - குடங்கையும், செங்காவி - செவ்வல்லிப்பூவும், காலன் - யமனும், வடு - மாவடுவகிரும், மான் - மானும், (ஆகிய இவையிணையாதற் குரிய பொருள்களாம் அன்றியும்) குழையை அடர்ந்து - குழையைக் கடந்து, கருவிளையை - காக்கணம்பூவையும், வண் சகோரத்தை - வளவிய சகோரப்பறவையையும், அடும் - வெல்லும், எ-று.

(வி-ரை.) குழை - காதணி. அடல் - வெல்லுதல். அடர்தல் - கடத்தல். (கசு)

## கொங்கையினியல்பு.

அடர்ந்து திரண்டிடங்கொண் டண்ணாந்து விம்மிப்
படர்ந்து சுணங்கு பரந்து—தடங்கொண்
டிணைத்துத் ததும்பி யிறுமாந்து வீங்கிப்
பணைத்துமுகம் பார்க்குமது பார்.

(ப - ரை.) அடர்ந்து - நெருங்கி, திரண்டு - உருண்டு, இடம் கொண்டு - இடம்பெற்று, அண்ணாந்து - மேல்நோக்கி, விம்மி - பருத்து, படர்ந்து - பரவி, சுணங்கு பரந்து - தேமல் படர்ந்து, தடம் கொண்டு - பெருமைபெற்று, இணைத்து - ஒன்றற்கொன்று ஒத்து, ததும்பி - தளதளத்து, இறுமாந்து - செருக்கி, வீங்கி - மிகப் பெரு

த்து, பணைத்து - பக்கங்கொண்டு, முகம் பார்க்கும் - முகத்தைநோக்கும், அது - அதனை, பார் - நோக்கக்கடவை, எ-று.

(வி-ரை.) அடர்தல் - நெருங்குதல். திரளல் - உருள்வடிவாதல். சுணங்கு - தேமல். (கரு)

கொங்கைக்கு அணிபொருளும், இணையும்.

பார்தண் களபம் படீரம் புழுகுபனி
நீர்குங்கு மஞ்சாந்து நித்திலங்கச்—சாரவடங்
கற்பக வல்லி கரும்புகருங் கண்மாமை
பொற்சிறுபுண் மாலைபொருப் பு.

(ப-ரை.) பார் - பார்க்கக்கடவை, தண் களபம் - குளிர்ந்த கலவைச் சந்தனம், படீரம்-பச்சைக்கற்பூரம், புழுகு—, பனிநீர்—, குங்குமம்—, சாந்து - சந்தனம், நித்திலம் - முத்து, கச்சு - கஞ்சுகம், ஆரவடம் - முத்துமாலை, கற்பகவல்லி - கற்பகக்கொடி, கரும்பு—, கருங்கண் - கருநிறக்கண், மாமை-மாம்பிஞ்சு, பொன் - தேமல், சிறு புள்-சிறுபறவை, மாலை - மலர்மாலை, பொருப்பு - மலையுருவம், எ-று.

(வி-ரை.) புழுகு - பனுகு. கஞ்சுகம்-ரவிக்கை. ஆரம் - முத்து. கருங்கண் - முலைக்கண். சிறுபுள் - கிளிமுதலாயினவற்றுருவம். புள்மாலை - கிளிவரிசை. (கசு)

பொருப்பிளநீர் வேண்மகுடம் பொற்குடஞ்செப் பியானை
மருப்புவன சஞ்சக்ர வாகந்—திருக்கலசங்
கோங்கரும்பு பந்து கொலைசூது தாளமொக்கு
ணீங்கியிரா தேபுழுகு நெய்.

(ப-ரை.) பொருப்பு - மலை, இளநீர்—, வேள் மகுடம் - மன்மதகிரீடம், பொற்குடம்—, செப்பு—, யானை மருப்பு - யானைத்

கொம்பு, வனசம் - தாமரையரும்பு, சக்ரவாகம் - சக்ரவாகப்பறவை, திருக்கலசம் - அழகிய கலசம், கோங்கரும்பு - கோங்கமொட்டு, பந்து—, கொலை - கொலைக்கருவி, சூது - சூதாடு கருவி, தாளம் - கைத்தாளம், மொக்குள் - நீர்க்குமிழி, புழுகு நெய் - புனுகுநெய், (ஆகிய இவைகள்) நீங்கியிராது - எப்போதும் ஒழிந்திராது, எ - று.

கூந்தலினியல்பும், அணிபொருளும்.

நெய்த்துக் கருகி நெறித்துவிடும் பூமாலை
வைத்துக் கடைசுழன்று வார்ந்தொழுகி—மொய்த்தளிகள்
சூழ்ந்துவடி வம்பலம்பித் துஞ்சுடைத்தா யூட்டுபுகை
வாழ்ந்துதக ரங்கமழு மால்.

(ப - ரை.) நெய்த்து - நெய்ப்புடையதாகி, கருகி - கறுத்து, நெறித்துவிடும்-குழன்றுவிடும், பூமாலை வைத்து-மலர்மாலை செருகி, கடை குழன்று - கடை சுருண்டு, வார்ந்து ஒழுகி - நீண்டு தொங்கி, அளிகள் மொய்த்து - வண்டுகள் மொய்த்து, சூழ்ந்து - சுற்றி, வடி வம்பு அலம்பி—, துஞ்சு உடைத்தாய்- தூங்குதலையுடையதாய், ஊட்டு புகை வாழ்ந்து - ஊட்டப்பட்ட புகைதங்கி, தகரம் கமழும் - மயிர்ச் சாந்து பரியளிக்கும், எ - று.

(வி - ரை.) அளி-வண்டு. வம்பு-மணம். தகரம்-மயிர்ச்சாந்து.()

மாலைகழு நீர்முல்லை மல்லிகைசெவ் வந்திபிச்சி
யேலம் வகுள மிலைத்தொடைதேன்—சாலநறும்
புன்னைபாசும் பசலை பொலிந்து பிடித்தடக்கை
பின்னிவிட்ட கூந்தலெனப் பேசு.

(ப - ரை.) மாலை - மாலையாய்த் தொடுக்கப்பட்ட, கழுநீர்—, முல்லை—, மல்லிகை—, செவ்வந்தி—, பிச்சி—, ஏலம்—, வகுளம்—,

இலைத்தொடை - இலைமாலை, தேன்—, சால் - மிகுதியாய், நறும் புன்னை-மணக்கிற புன்னை, பசும் பசலை பொலிந்து-பசும்பசப்பினால் விளங்கி, பிடி தடக்கை - பெண்யானையின் பெரிய துதிக்கைபோல, பின்னிவிட்ட கூந்தல் என—, பேசு - சொல்லக்கடவை, எ-று.

(வி-ரை.) வகுளம் - மகிழம்பூ. இலை-மருமுதலியன. பசலை - பசலைநிறம். பசப்பு-நிறவேறுபாடு. பசும்பாளை என்றும் பாடமுண்டு.

கூந்தற்கு இணை.

பேசுங் குழலைப் பிறங்கு முகிலென்று
மாசிலா நீல மணியென்றும்—வீசுமற
லென்று மிருளென்று மெழிற்கவரி பாசிக்கொத்
தென்று முவமை யியம்பு.

(ப - ரை.) பேசும் - புகழ்ந்து பேசுதற்குரிய, குழலை-கூந்தலை, பிறங்கும் - விளங்குகிற, முகில் என்றும் - மேகமென்றும், மாசு இல்லா - குற்றமற்ற, நீலமணி என்றும் - நீலரத்நமென்றும், வீசும் - ஒளிவீசுகிற, அறல் என்றும் - கருமணல் என்றும், இருள் என்றும்- இருட்டென்றும், எழில்-அழகாகிய, கவரி - சாமரம், பாசிக்கொத்து என்றும் - நீர்ப்பாசிக்கொத்தென்றும், உவமை இயம்பு - உவமானஞ் சொல்லக்கடவை, எ-று,

(வி - ரை.) பிறங்கல்-விளங்கல். முகில்-கார்காலமேகம். (௨0)

மொழிக்கும், அதரத்திற்கும், பற்கும் இணை.

இயம்புமொழி கிள்ளை யிரங்கிசையாழ் வீணை
வயங்கு கருங்குயில்வண் பூவை—தயங்கினிய
பாகு கரும்பமுதம் பாறேன் மதுப்பழமென்
றுகுமத ரம்பவள மாம்.



(ப - ரை.) இயம்பும்-பேசுகிற, மொழி-சொல்லுக்கு, கிள்ளை - கிளி, இரங்கு இசை யாழ் - ஒலிக்கிற இராகத்தையுடைய வீணை, வீணை—, வயங்கு-ஒளிசெய்கிற, கருங்குயில்-கரியகுயில், வள் பூவை-வளவிய பூவை, தயங்கு இனிய பாகு-சிறந்த மதுரமான பாகு, கரும்பு அமுதம் பால் தேன் மது பழம் என்று ஆகும் - கரும்பு பால் தேன் கள் கனியென்று சொல்லப்படுகிற யாவும் உவமைப்பொருள்களாம், அதரம்-இதழ், பவளம் ஆம்-பவளத்துக்கு நிகராகும், எ-று.

(வி - ரை.) யாழ்வீணை யென்பன யாழின் வகையைக் குறித் தன.

(உக)

ஆமே பவளமரக் காம்பன் முருக்கிலவம்
பூமெல் லிதழ்வீழிப் பொற்கனியாந்—தாமமணிக்
குல்லைபருந் தொண்டை கொடித்தூ துளைகோப
முல்லை முருந்தெயிறு முத்து.

(ப - ரை.) பவளம் - பவளமும், அரக்கு ஆம்பல் - செவ்வந்தி மலரும், முருக்கு - முருக்கம்பூவும், இலவம்பூ-இலவம்பூவின், மெல் இதழ் - மெல்லிய இதழும், பொன் - அழகாகிய, வீழிக்கனி - வீழிப் பழமும், ஆம் - உவமைப் பொருள்களாம்; (அன்றியும்) தாமம் மணி-ஒளியும் அழகுமுள்ள, குல்லை - குல்லையும், அரு - அருமையாகிய, தொண்டை - கோவைப்பழமும், கொடி தூதுளை-கொடியிற்பழுத்த தூதுளம்பழமும், கோபம் - இந்திரகோபமும் (உவமைப்பொருள்க ளாம்); எயிறு - பல்லுக்கு, முல்லை - முல்லையரும்பு, முருந்து - மயிலிறகினடி, முத்து—, ஆம்-(ஆகிய மூன்றும் உவமைப்பொருள்க ளாம்), எ - று.

(வி-ரை.) அரக்கு - செந்நிறம். தொண்டை - திசைச்சொல், கோவையென்பது பொருள்.

(உஉ)

முகத்திற்கும், கழுத்திற்கும், இடைக்கும் இணை.

முத்தார் முளரி முழுமதிய மாந்திலகம்
வைத்துநகை காந்தி மருவுமுக—நத்துடனே
பூகம் வரிக்கழுத்துப் பூங்கொடிமின் வாளிவஞ்சி
மாகந் துடிநூன் மருங்கு.

(ப-ரை.) திலகம் வைத்து - பொட்டிட்டு, நகை - விளங்குகிற, காந்தி மருவும் - ஒளியையுடைய, முகம் - முகத்துக்கு, முத்து ஆர் முளரி - முத்தினையுடைய தாமரைமலர், முழு மதியம் - பூர்ணசந்திரன், ஆம்-உவமைப்பொருள்களாம்; நத்துடனே - சங்குடனே; பூகம் - கமுகமரமும், வரி கழுத்து - நீண்ட ரேகைகளையுடைய கழுத்திற்கு (உவமைப்பொருள்களாம்); பூங்கொடி - பூங்கொடியும், மின் - மின்னற்கொடியும், வாளி - அம்பும், வஞ்சி - வஞ்சிக்கொடியும், மாகம் - ஆகாயமும், துடி - உடுக்கும், நூல் மருங்கு - நூலிழைபோலும் இடைக்கு (உவமைப்பொருள்களாம்), எ-று.

(வி-ரை.) முத்துப்பிறக்கு மிடங்களி லொன்றாதலால் தாமரை மலரை 'முத்தார் முளரி' என்றார். நத்து - சங்கு. பூகம் - வடசொற்றிரிபு மாகம் என்பதும் வடசொற்றிரிபு. (உ௩)

நுதற்கும், வெயர்வைக்கும், சொற்கும் இணை.

மருங்கொசியு மின்னார்தம் வாணுதலை வானத்
தரும்புங் குழவிமதி யாயும்—புரந்தரன்றன்
வில்லெனவு முத்தம் வெயர்வெனவு மேவிரும்பிச்
சொல்லும்பா குங்கரும்புஞ் சொல்.

(ப-ரை.) மருங்கு ஒசியும் - இடைதுவளாநின்ற, மின்னார்தம் - மாதராது, வாள் நுதலை - ஒளியையுடைய நெற்றியை, வானத்து அரும்பும் - ஆகாயத்தில் தோன்றுகிற, குழவி மதியாயும் - இளம்பிறையாக

வும், புரந்தரன்தன் வில் எனவும் - இந்திரனது வில்லென்றும்; வெயர்வு - வெயர்வையை, முத்து எனவும்-முத்தென்றும்; சொல் - சொல்லுக்கு, விரும்பிச் சொல்லும் - விரும்பிப் பேசப்படுகிற, பாகும் - பாகினையும், கரும்பும் - கரும்பஞ்சாற்றினையும், (சொல் - உவமைப் பொருள்களாகச் சொல்லு), எ - று.

(வி-ரை.) ஒசிதல்-ஒடிதல் எனினுமாம். வாள் - ஒளி. நுசல் - நெற்றி. குழவியென்றது ஈண்டிளமையைக் குறித்தது; புரந்தரன் - வடசொற்றிரிபு. மூத்தம் - முக்தம் என்னும் வடசொற்றிரிபு. பாகு- வெல்லப்பாகு, சர்க்கரைப்பாகு. கரும்பு அதன் சாற்றைக் குறித்தது.

## புருவத்திற்கும், மூக்கிற்கும், கபோலத்திற்கும், காதிற்கும் இணை.

கரும்புருவம் வெண்பிறையுங் கைச்சிலையு நாசி
யரும்புகுமிழ் சண்பகமெட் பூவாம்—விரும்பியிடுந்
தர்ப்பணங்க போலந் தழைகாது கத்தரிகை
பொற்புவள்ளை யூசல் புகல்.

(ப-ரை) கரும்புருவம் - கரிய புருவத்துக்கு, வெள் பிறையும்- வெண்மையாகிய பிறையும், கை சிலையும் - கையிற்பிடித்த வில்லும்; நாசி - மூக்கிற்கு, குமிழ் அரும்பு - குமிழரும்பும்; சண்பகம் - சண்பகப்பூவும், எள் பூ - எட்பூவும், ஆம் - உவமைப்பொருள்களாம்; கபோலம் - கபோலத்திற்கு, விரும்பியிடும் - யாவரும் விரும்புகிற, தர்ப்பணம் - கண்ணுடியும்; தழை காது - தழைத்த காதிற்கு, கத்தரிகை - கத்தரிகையும், பொற்பு வள்ளை - அழகுண்டாகிய வள்ளைத்தண்டும், ஊசல் - ஊசலும், புகல் - உவமைப்பொருள்களாகச் சொல், எ-று.

(வி-ரை ) சிலை - சிலா என்னும் வடசொற்றிரிபு. தர்ப்பணம் என்பதும், கபோலம் என்பதும் அவை. (உ௫)

கைக்கும், நகத்திற்கும், வாய்க்கும், நகைக்கும்,
மெய்க்கும் இணை.

புகலுகின்ற செங்காந்தள் புண்டரிகஞ் செங்கை
யுகிருவமை கிள்ளை யொளிர்மூக்காம்—பகர்குமுதஞ்
செய்யவா யொப்பாஞ் சிறந்தநகை வெண்ணிலவாம்
மெய்ம்மாந் தளிரென்ப வே.

(ப-ரை.) புகலுகின்ற - சொல்லப்படுகிற, செங்காந்தள் - செங்காந்தட்பூவும், புண்டரிகம் - தாமரைப்பூவும், செம் கை - செவந்த கைக்கு (உவமைப்பொருள்களாம்); கிள்ளை-கிளியின், ஒளிர் மூக்கு - விளங்குகின்ற மூக்கானது, உகிர் உவமை - நகத்திற்கு உவமைப்பொருளாம்; பகர் - புகழ்ந்து சொல்லப்படுகிற, குமுதம் - செவ்வல்லி மலரானது, செய்ய வாய்க்கு - செவந்த வாய்க்கு, ஒப்பு ஆம் - உவமைப்பொருளாம்; வெள் நிலவு - வெண்ணிலவானது, சிறந்த நகை ஆம் - சிறந்த நகைக்கு உவமைப்பொருளாம்; மாந்தளிர் - மாந்தளிரானது, மெய் என்ப - மெய்க்கு உவமைப்பொருளாம், எ-று.

(வி-ரை.) புகலுகின்ற என்றது யாவராலும் புகழ்ந்து பேசப்படுகிற என்றபடி. காந்தளை கோடல் என்றும் வழங்குவர். வெண்ணிலவு - வெண்மையாகிய சந்திரிகை. பொய்யாகிய உடம்பை மெய் யென்றது மங்கலவழக்கு. (உசு)

தோள், வயிறு, உந்தி, அல்குல், தோடை, முழந்தாள்,
கணைக்கால் என்பவற்றிற்கு இணை.

வேயிருதோ ளாலுதா மிக்கவுந்தி நீர்ச்சுழியாஞ்
சேயமணி யாலவட்டந் தோரவு—தூயவல்குன்
மென்கதலி யூரு விளங்குமுழந் தாளலவ
னன்கணைக்கா ருவுவரா ளுடு.

(ப-ரை.) வேய் - மூங்கிலானது, இரு தோள்-இரண்டு தோள்களும், ஆல் - ஆலிலையானது, உதரம் - வயிற்றுக்கும், நீர்ச்சுழி - நீர்ச்சுழியானது, மிக்க உந்தி - மேலான நாபிக்கும். ஆம் - உவமைப் பொருள்களாம்; சேய மணி - சேமக்கலமும், ஆலவட்டம்-ஆலவட்டமும், தேர் - தேர்த்தட்டும், அரவு - பாம்பின்படமும், தூய அல்குல் - தூய்மையாகிய அல்குலுக்கு (உவமைப்பொருள்களாம்); மெல்-மெல்லிய, கதலி - வாழைத்தண்டானது, ஊரு - தொடைக்கு (உவமைப் பொருளாம்); அலவன்-நண்டானது, விளங்கும்-பிரகாசிக்கிற, முழந்தாள்-முழங்காலுக்கு (உவமைப்பொருளாம்); தாவு-பாயு மியல்புள்ள, வரால் - வரால்மீனானது, நல் கணைக்கால் - அழகிய கணைக்காலுக்கு (உவமைப்பொருளாம்); நாடு - பார், எ-று.

(வி-ரை.) உதரம் - வடசொல். நாபி - கொப்பூழ். ஆலவட்டம்-ஓர்வகை விசிறி. தேர், அரவு என்பன இரண்டும் ஆகுபெயர்கள். கதலி, ஊரு இரண்டும் வடசொற்கள். (உஎ)

## புறவடிக்கும், உள்ளடிக்கும், குதிக்கும் இணை.

நாடும் புறவடியே நன்கமைந்த புத்தகமு
மோடுகின்ற வாமை யுறுப்புமாந்—தோடவிழுங்
கஞ்சமல ருள்ளடியே கந்துகமா குங்குதியே
வஞ்சமறச் சொல்லு மருங்கு.

(ப-ரை.) நன்கு அமைந்த - நன்றாயமைக்கப்பட்ட, புத்தகமும்-புத்தகமும், ஓடுகின்ற-நீரிலோடாநின்ற, ஆமை - ஆமையின், உறுப்பும் - அவயவமும், நாடும்-யாவராலும் பார்க்கப்படுகிற, புறவடி ஆம் - புறவடிக்கு உவமைப்பொருள்களாம்; தோடு அவிழும்-இதழ் விரிகிற, கஞ்சமலர் - தாமரைமலரானது, உள் அடி - உள்ளடிக்கு (உவமைப் பொருளாம்); கந்துகம் - பந்தானது, குதி ஆகும் - குதிக்கு உவமைப்

பொருளாம்; (இவ்வாறு சொல்வதே) வஞ்சம் அற சொல்லும் மருங்கு - வஞ்சமறச் சொல்லும் முறைமையாம், எ-று.

(வி-ரை.) புத்தகம்-புஸ்தகம் என்னும் வடசொற்றிரிபு. ஆமையுறுப்பு என்றது ஆமை முதுகினை. கஞ்சம்-வடசொல்; கந்துகம் என்றதும் அது. (உஅ)

## மகளிர் விளையாட்டிற்குரியன.

மருங்குவளர் பூங்கா மலர்வாவி யூச
றிருந்துமணிச் செய்குன்று தேமா—விரும்பமுத
பானங் கிளிபூவை பந்துகழங் கன்னமயின்
மானமுல்லைப் பந்தர்வளர்ப் பு.

(ப-ரை.) மருங்கு வளர் பூங்கா - அருகாகவளர்கிற பூஞ்சோலை, மலர் வாவி - பூம்பொய்கை, ஊசல் - ஊசல், திருந்துமணிச்செய் குன்று - திருத்தமாகிய மணிச்செய்குன்று, தேமா - தேமாமரம், விரும்பு - விரும்புதற்குரிய, அமுதபானம் - அமிர்தப்பருக்கு, கிளி-கிள்ளை, பூவை - சாரிகைப்புள், பந்து—, கழங்கு—, அன்னம்—, மயில்—, மானம்-மேலான், முல்லைப்பந்தர் வளர்ப்பு-முல்லைப்பந்தலை வளர்த்தல், (ஆகிய இவையே மகளிர் விளையாட்டிற்குரியன), எ-று.

(வி - ரை.) மணிச்செய் குன்று - ரத்நங்களாற் செய்யப்பட்ட செயற்கைமலை; இது பெருஞ் செல்வர் தாம் பெற்ற சிறுமியர் ஏறி விளையாடற்பொருட்டுச் செய்யப்படுவது. அமிர்தப்பருக்கு-அமிர்தங் குடித்தல். (உக)

## மின்னார்முற்றேன்றுமிசை.

வளர்க்குஞ் சிறுதூவி வண்டறுகாற் றும்பி
யளிக்குங் குலவுஞிமி றார்ப்புங்—களிக்குஞ்
சுரும்பு மதுகாமுஞ் சூழ்விளரிப் பாட்டு
முருந்தெயிற்று மின்னார்க்கு முன்.

(ப-ரை.) முருந்து எயிறு - மயிலிறகினடிபோன்ற பற்களை யுடைய, மின்னார்க்கு முன் - மாதர்க்கு முன்னே தோன்றும் இசைக ளாவன: வளர்க்கும் - வளர்க்கப்படுகிற, சிறு தூவி - சிறு தூவியை யுடைய, வண்டு - வண்டு, அறுகால் தும்பி - ஆறுகால்களையுடைய தும்பி, அளிக்கும் - வளர்க்கப்படுகிற, குலவும் - விளையாடுதற்குரிய, ஞிமிறு-பொன்வண்டு (ஆகிய இவற்றின்) ஆர்ப்பும்-இசையும், களிக் கும் - களித்தற்குரிய, சுரும்பும் - மதுகாமும், சூழ்விளரிப்பாட்டும் - சூழ்ந்து பாடப்படுகிற விளரிப்பாட்டும் (ஆகிய இவைகளேயாம்), எ-று.

(வி-ரை.) ஆர்ப்பு-ஓசையெனினுமாம். குலவல் - விளையாடுதல். சுரும்பு, மதுகரம் என்பன வண்டின் பேதங்கள். விளரிப்பாட்டு - விளரிப்பண்ணோடு கூடிய பாட்டு. மின்னார்-மின்கொடி போல்பவர் (மாதர்). (௩0)

## தூதுக்குரியனவும், பாணர் பெறுவனவும்.

### கலித்துறை.

முன்னாகும் பூவை முலையேறு தங்க முடிபுரைக்கப்
பின்னாகு மன்றிற் பெரும்புகழ்ப் பாணன பெறும்பரிசில்
பொன்னா ரணிகலம் பூமா துரிமைவெம் போர்க்களமா
ரொன்னா ரிடுதிறை வெங்கிடு வார்த முறையிடமே.

(ப-ரை.) முலை ஏறு - தனத்தின்மேல் மிகுந்திருக்கிற, தங்கம்- தங்கத்தின், முடிபு உரைக்க-முடிவைச் சொல்வதற்கு, பூவை-நாகண வாய்ப்புள்ளானது, முன் ஆகும் - முற்பட்டதாகும்; அன்றில் - அன் றிற்பறவையானது, பின் ஆகும் - பிற்பட்டதாகும்; பெரும் புகழ் - பெருங்கீர்த்தியையுடைய, பாணன்-பாணனானவன், பெறும் - பெறு தற்குரிய, பரிசில் - பரிசில்கள், (யாவையோவெனின்) பொன் - சுவர்ணம், ஆர் அணிகலம்-அருமையாகிய ஆபரணம், பூ - பூமி, மாது உரிமை - பெண்ணுரிமை, வெம்போர்க்களம் ஆர் - கொடும்போர்க்

களத்தில் வந்தெதிர்த்த, ஒன்னார் இடு - பகைவர் கொண்டுவந்து சமர்ப்பித்த, திறை - திறைப்பொருள், வெந்நிடுவார் - புறங்காட்டி யோடும் பகைவரது, உறையிடம்-வாஸஸ்த்தாநம் (ஆகிய இவைகளே யாம்), எ-று.

(வி - ரை.) தனம் - ஸ்த்தனம் என்னும் வடசொற்றிரிபு. முலே யேறுதங்கம் என்றது தேமலே; இது தலைவரது பிரிவாற்றாமையா லுண்டாவது. அன்றில் - கிரவுஞ்சம்; இது ஓர் பறவை விசேடம். பாணன்-பரடுநன் என்பதன் மரூஉ; இது அரசர் முதலியோரது புகழ் பாடுவோனைக் குறித்தது. பரிசில் - சம்மானம். மாதுரிமை - கலியா ணம். திறை - கப்பம். (௩௧)

நவரசம்.

இடமொன்று மைக்கர னீந்தமெய்ப் பாகத் தெழிற்கிணையாத்
திடமொன் றியவணச் சிங்காரம் வீரஞ் சிரிப்பருளே
யடமின் றியசினங் குற்சையுஞ் சாந்தமு மற்புதமுங்
கடியென்று மொன்பது மாநல் லிரதத்தைக் காட்டுதற்கே.

(ப-ரை.) இடம் ஒன்று - இடதுபக்கம்பொருந்திய, உமைக்கு- உமாதேவிக்கு, அரன் - சிவபிரான், ஈந்த - கொடுத்த, மெய்ப்பாகத்து- தன் சரீரத்துப் பங்கினது, எழிற்கு இணையா - அழகுக்கொப்பாக, திடம் ஒன்றிய - உறுதியாகிய, வண்ணம்—, சிங்காரம்—, வீரம்—, சிரிப்பு—, அருள்—, அடம் இன்றிய சினம்—, குற்சையும்—, சாந்த மும்—, அற்புதமும்—, கடி—, என்ற ஒன்பதும் - என்றுசொல்லப் பட்ட ஒன்பதும், நல் இரதத்தைக் காட்டுதற்கு ஆம்-அழகாகிய ரசத் தைப் புலப்படுத்தற் குரியனவாம், எ-று.

(வி - ரை.) உமை - உமா என்னும் வடசொற்றிரிபு. அரன் - ஹரஃ என்னும் வடசொற்றிரிபு. சிங்காரம், வீரம், குற்சை, அற்புதம் என்பனவும் அவை. இரதம்-ரஸம் என்னும் வடசொற்றிரிபு. (௩௨)

பஞ்சவாசம், பஞ்சசயனம்.

தற்கோல மேல மிலவங்கம் பாளிதஞ் சாதியங்காய்
நற்கூறை நாற்ற மயிற்சேணம் பஞ்சணை நற்றுகிலே
விற்கூறு தூவிதண் மீப்பாய் சயனம் விளங்குமைந்தாம்
பொற்கோட்டலர்முலைப் பூவையன் ஞரன்புபோர்த்தவர்க்கே.

(ப-ரை.) பொன் கோட்டு - பொன்மலைபோன்ற, அலர் - அடி பரந்த, முலை - தனங்களையுடைய, பூவை அன்னார் அன்பு போர்த்த வர்க்கு-மாதரது அன்பு பூண்டவர்க்கு, தற்கோலம்—, ஏலம்—, இல வங்கம்—, பாளிதம்—, சாதியங்காய்—, (ஆகிய இவற்றின்) நல் கூறு - சிறந்த பாகமாகிய, ஐ-அழகுள்ள, நாற்றம்-பஞ்சவாசங்களாம்; மயில் சேணம் - மயிலிறகு, பஞ்சு அணை-பஞ்சுமெத்தை, நல் துகில்-சிறந்த வஸ்திரம், வில் கூறு தூவி-ஒளிமிகுந்த அன்னத்தின் சிறகு, தண் மீ பாய் - குளிர்ந்த மேலான பாய், (என்று சொல்லப்பட்டு) விளங்கும் - பிரகாசிக்கிற, ஐந்து - அஞ்சும், சயனம் ஆம் - பஞ்சயச னங்களாம், எ-று.

(வி-ரை.) பாளிதம் - கற்பூரம். தற்கோலம் - வால்மிளகு (சிறு நாவற்பூ). சாதியங்காய் - சாதிக்காய். மயிற்சேணம்-மயிலிறகு. தூவி-அன்னச்சிறகினது மயிர். சயநம்-படுக்கை. பொற்கோடு-பொன்மலை (மேருமலை). பூவையன்னார் என்றது மொழியாற் பூவையை நிகர்த்த வர் என்றவாறு - பொருள் தேமல் என்றலுமாம். (௩௩)

எண்வகை மணம்.

கேட்பிர மம்பிர சாபத்தி யத்தொடு கேண்மையுறக்
காட்டிய வாரிடந் தெய்வம் புகழ்பெறு காந்தருவ
நாட்டா சுரமு மிராக்கத நண்ணும்பை சாசமென்றே
சாட்டுத லெண்மண மாகுந் தகையன்பு தந்திடவே.

(ப - ரை.) கேள் - கேட்கக்கடவை, பிரமம்—, பிரசாபத்தியத் தொடு—, கேண்மை உற காட்டிய ஆரிடம் - நிகராகக் காட்டப்பட்ட ஆரிடம், தெய்வம் - தைவம், புகழ் பெறு காந்தருவம் - புகழ்பெற்ற கந்தருவம், நாட்டு-நிலைபெறுத்தப்பட்ட, ஆசுரமும்-ஆசுரமும், இராக்கதம் - இராக்கதமும், நண்ணும் பைசாசம் என்று - பொருந்திய பைசாசம் என்று, சாட்டுதல் - சொல்லுதல், தகை அன்பு தந்திட - பேரன்பைப் புலப்படுத்தற்குரிய, எண் மணம் ஆகும் - எண்வகை மணமாகும், எ-று.

(வி - ரை.) பிரமம் - பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீ முன்னர்க் கொடுப்பது. பிரசாபத்தியம் - தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தார் உட்பட்டு, அவளைத் தீமுன்னர்க் கொடுப்பது. ஆரிடம் - ஒன்றிரண்டு பசுவும் எருதும் வாங்கிக்கொண்டு கன்னிகையைத் தீமுன்னர்க் கொடுப்பது. தெய்வம் - வேள்வியாற் பிறந்த கன்னிகையைத் தீமுன்னர்க் கொடுப்பது. காந்தருவம் - கொடுப்பாரும் கேட்பாரும் இன்றித் தலைவனும் தலைவியும் தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுங் கூட்டம். ஆசுரம் - பெண்ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வது. இராக்கதம் - பெண்ணும் பெண்ணினத்தாரும் உடன்படாமல் வலிதிற் கொள்வது. பைசாசம்-துயில்வாளைச் சென்று கூடுவது. (௩௪)

## முத்துப்பிறப்பிடம்.

தந்தி வராக மருப்பிப்பி பூகந் தணிக்கதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா
ரிந்து வுடும்புக ராமுத்த மீனு மிருபதுமே.

(ப-ரை.) தந்தி வராகம் மருப்பு - யானை பன்றி என்பவற்றின் கொம்புகளும், இப்பி - முத்துச்சிப்பிகளும், பூகம்-கமுகங்காய்க் குலை

யும், தனி கதலி - ஒப்பற்ற வாழைக்காய்க்குலேயும், நந்து - சங்கும், சலஞ்சலம் - சலஞ்சலமும், மீன்றலே - மீன் தலேயும், கொக்கு-கொக்கின் தலேயும், நளினம் - தாமரையும், மின்னுர் கந்தரம் - மாதாது கழுத்தும், சாலி - செந்நெற்கதிர்க்குலேயும், கழை - மூங்கிலும், கன்னல்-கரும்பும், ஆவின்பல்-பசுவின்பல்லும், கட்செவி-பாம்பும், கார் - மேகமும், இந்து-சந்திரனும், உடும்பு-உடும்பின் தலேயும், கரா-முதலேயும், (ஆகிய) இருபதும் - இருபது பொருள்களும், முத்தம் ஈனும் - முத்தைத் தரும், எ - று.

(வி-ரை.) தந்தி-வடசொற்றிரிபு; தந்தத்தை யுடையதென்பது பொருள். பூகம், கதலி, சலஞ்சலம், நளினம், கந்தரம், சாலி, இந்து, முத்தம் என்பனவும் வடசொற்றிரிபுகளே. விரிவஞ்சி இவற்றின் பொருள் விரித்திலம்.

(நரு)

## செல்வமாதிருப்பிடம்.

### வெண்பா.

பதுமங் கொடிநகர்மின் பைந்துளவு வில்வங்
கதிர்விளேவு சங்குகட றீபம்—வதுவைமனே
நற்பரிபாற் பாண்டமிவை நாண்மலரா ணீங்காது
நிற்பிடநல் லோர்நெஞ்சு மே.

(ப-ரை.) பதுமம் - தாமரைமலர், கொடி - துவசம், நகர் - நகரம், மின் - மின்னல், பைந்துளவு - பசிய துளசி, வில்வம் - வில்வம், கதிர் விளேவு - நெற்கதிரின் விளேச்சல், சங்கு - சங்கு, கடல் - சமுத்திரம், தீபம் - விளக்கு, வதுவை மனே-கலியாண வீடு, நல் பரி - நல்ல குதிரை, பால் பாண்டம்-பால் பானே, இவை-இவையாவும், நாள் மலராள் - இலக்குமி, நீங்காது நிற்கும் இடம் - இடையருமல் வாழுமிடங்களாம்; நல்லோர் - நல்லாரது, நெஞ்சும் - மனமும், (இலக்குமி வாழு மிடமேயாம்), எ-று.

(வி-ரை.) பதுமம், நகர், வில்வம், சங்கு, தீபம், வதுவை, பாண்டம் என்பன வடசொற்றிரிபுகள். (௩௬)

## மதன் கணையெய்யுமியல்பு.

நெஞ்சி லரவிந்த நீள்சூதங் கொங்கையிலே
துஞ்சும் விழியி லசோகமாம்—வஞ்சியர்தஞ்
சென்னியிலே முல்லை திகழ்நீல மல்குலிலே
யன்னவே ளெய்யுமியல் பாம்.

(ப-ரை.) வஞ்சியர் - மாதரது, நெஞ்சில் - மார்பில், அரவிந்தம் - தாமரைமலர், கொங்கையில் - தனத்தில், நீள் சூதம் - பெரிய மாமலர், துஞ்சும் விழியில் - உறங்குதற்குரிய கண்ணில், அசோகம்- அசோகமலர், சென்னியிலே - தலையில், முல்லை - முல்லைமலர், அல்குலிலே - மர்மஸ்தாநத்தில், திகழ் நீலம் - விளங்குகிற நீலமலர், ஆம்- அம்பெய்யு மிடங்களாம், அன்ன-அத்தன்மையனாகிய, வேள் - மன்மதன், எய்யும் - எய்கிற, இயல்பு ஆம் - இயல்பாகும், எ-று.

(வி - ரை.) அரவிந்தம், சூதம், அசோகம், நீலம் என்பன வடசொற்கள். மர்மஸ்த்தாநம் - பெண்குறி. (௩௭)

## வேணகர்க்கடையாளம்.

ஆமே கொடிவள்ளை யம்புயமு நெய்தற்பூ
பூமே சுரும்பு புனலாட்டுக்—காமவே
டென்றனுறு மென்மருகு தோடன் மாடமதி
லன்றுநக ருக்கடையா ளம்.

(ப-ரை.) காமவேள் - மன்மதன், அன்றும்-வாழ்கிற, நகருக்கு- நகரத்துக்கு, அடையாளம் - அடையாளங்களா யிருப்பன (எவையெனின்), கொடி வள்ளை - வள்ளைக்கொடி, அம்புயம்-தாமரைமலர்,

நெய்தற்பூ - நெய்தற்பூ, பூமேசுரும்பு - மலர்மேலுள்ள வண்டு, புனலாட்டு - நீராடல், தென்றல் உறும் - தென்றற்காற்று வீசுகிற, மெல் மறுகு - மென்மையாகிய வீதி, தேராடல்-தேராடுதல், மாடம் மதில் - மாடமும் மதிலும், ஆம் - ஆகும், எ-று.

(வி - ரை.) அம்புயம் - வடசொற்றிரிபு; இதற்கு நீரிற் பிறப்பதென்பது பொருள்; அம்பு - நீர், ஜம் - பிறப்பது. (௩அ)

மின்னார் கைத்தொழில்.

அம்பொற் றொடியணிமி னார்தங்கைக் கைந்துதொழில்
செம்பவள மெல்விரலைச் சேர்த்தெண்ண - லம்பெழுதல்
பூசித் திலைகிள்ளல் பூத்தொடுத்தல் பண்ணெழில்யாழ்
வாசித்த லென்றுரைசெய் வார்.

(ப - ரை.) அம் - அழகாகிய, பொன்-பொன்னினாற் செய்யப்பட்ட, தொடி - வளையலை, அணி - அணிந்த, மின்னார் - மாதாது, கைக்கு-கைகளுக்கு, ஐந்து தொழில்-ஐந்து தொழில்களுண்டு; (அவை யாவையெனின்), செம் பவளம் - செவந்த பவளம்போன்ற, மெல் விரலை-மெல்லிய விரல்களை, சேர்த்து எண்ணல் - சேர்த்து எண்ணுதல், அம்பு எழுதல் - அம்பினுருவத்தை யெழுதுதல், பூசித்து இலை கிள்ளல் - பூசைசெய்து இலைபறித்தல், பூ தொடுத்தல்-மலர் தொடுத்தல், பண்-பண்ணோடு கூடின, எழில் - அழகாகிய, யாழ் வாசித்தல்-வீணை வாசித்தல், என்று உரை செய்வார் - என்று சொல்வார் (அறிஞர்), எ-று.

(வி-ரை.) பவளம் - ப்ரவாளம் என்னும் வடசொற்றிரிபு. மின்னார் - மின்கொடிபோல்வார். (௩௯)

பெண்களின் பருவம்.

வாரிமணி வெய்யோன் மதிபா ரதம்வள்ளல்
சீரியல றம்வளர்க்குஞ் செய்கைதா—னரிவைகள்

பேதைமுத லாகப் பேரிளம்பெண் ணீறுக
வீதெழுவர் தம்பருவ மெண்.

(ப - ரை.) நாரி - பெண்ணே, கேள் - (யான் சொல்வதைக்) கேட்கக்கடவை! வாரி - கடல், மணி - அரதநம், வெய்யோன் - சூரியன், மதி - சந்திரன், பாரதம் - பாரதம், வள்ளல் - வள்ளல்கள், சீர் இயல் - சிறப்புப்பொருந்திய, அறம் வளர்க்கும் செய்கை - தரும பரிபாலநம் செய்யும் செய்கை, (ஆகிய இவைகளே) பேதை முதலாக - பேதை தொடக்கமாக, பேரிளம்பெண் ஈறு ஆக - பேரிளம்பெண் இறுதியாகச் சொல்லப்பட்ட, ஈது - இதுவே, எழுவர் பருவம் - ஏழ் பருவப்பெண்களது, எண் - பருவத்தெண்களாம், எ-று.

(வி - ரை.) நாரி - வடசொல். வாரி - கடல் - எ. மணி - அரதநம் - கூ. வெய்யோன் - சூரியன் - கஉ. மதி - சந்திரகலை-கசு. பாரதம் - பாரதப்போர் - கஅ. வள்ளல் - கொடையாளிகள்-உக. அறம் - தருமம் - நஉ. இந்தத் தொகைகளே பெண்பருவம் ஏழையும் குறிப்பன. இவற்றின் விரிவெல்லாம் பெருநூல்களிற் காண்க. (சo)

மகளிரான்மலர் மரம்.

கலித்துறை.

எண்மா தவிசண் பகம்பாலை புன்னை யெழிற்படலி
கொண்மா மகிழ மராவொ டசோகு குராமுல்லைமின்
பண்பாட னீழற் படனட்ட லாடற் பழித்தலுண்ணல்
கண்ணோக்கு தையணைத் தல்சிரித் தற்கலர்க் காடுறுமே.

(ப-ரை.) எண் - மதிக்கப்படுகிற, மாதவி - குருக்கத்தி, சண்பகம் - சண்பகம், பாலை - பாலை, புன்னை - புன்னை, எழில் படலி - அழகிய பாதிரி, கொள் மா - கொள்ளுதற்குரிய மா, மகிழ் - மகிழ், அம் மராவொடு - அழகிய மராவுடனே, அசோகு - அசோகம், குரா -

குரா, முல்லை - முல்லை, மின் - மின், (ஆகிய இவைகள் முறையே) பண்பாடல்-இருக்கத்தக்க, நீழல் படல்-சண்பகமாம், நட்டல்-எழிலைம் பாலைமாம், ஆடல் - புன்னை, பழித்தல் - பாதிரி, உண்ணல் - மகிழ மரம், கண் நோக்கு - மரா, உதை-அசோகு, அணைத்தற்கு-குரா, சிரித் தல் - முல்லைக்கொடி, அலர் காடு உறும்-மலர் மிகுதியாகப் பூத்தலைப் பொருந்தும், எ-று.

(வி-ரை.) மாதவி - வசந்த மல்லிகைக்கொடி யென்பாருமுளர். சண்பகம் - சம்பகமென்னும் வடசொற்றிரிபு. பாடலம் என்பதும் அது; இது படலம் எனக் குறுகிநின்றது. மரா - ஆச்சாமரம். அசோகு - அசோகம் என்னும் வடசொற்றிரிபு. (சக)

## திணையும், திணைக்குரியனவும்.

காடாகு முல்லை கழிநெய்த லாகுங் கல்லாங்குறிஞ்சி
நாடா மருத நடலைவெம் பாலையிந் நாட்டிற் றெய்வங்
கோடார் கரன்வரு ணன்குக னிந்திரன் கூறு துர்க்கை
மாடாயர் மீன்புல்லர் குன்றவர் கானவர் மள்ளருமே.

(ப-ரை.) காடு - காடு, முல்லை ஆகும் - முல்லைத் திணையாகும்; கழி-கழி, நெய்தல் ஆகும்-நெய்தற்றிணையாகும்; கல் - மலை, குறிஞ்சி ஆம் - குறிஞ்சித்திணையாகும்; நாடு - நாடு, மருதம் ஆம் - மருதத் திணையாகும்; நடலை - நடலை, வெம் பாலை - வெவ்விய பாலைத்திணை யாகும்; இந்நாட்டில் தெய்வம் - இந்தத் திணைகளிலுள்ள தெய்வங்க ளாவன, கோடு ஆர் கரன்-சங்கத்தை யேந்தின கையையுடையவனும், வருணன் - வருணனும், குகன் - முருகனும், இந்திரன்-இந்திரனும், கூறு துர்க்கை - யாவரும் புகழ்தற்குரிய துர்க்கையும், (ஆவர்; இவற் றில் வாழ்வோர் யாவர் எனின்), மாடு ஆயர்-மாடு மேய்க்கும் இடைய ரும், மீன் புல்லர் - வலைஞரும், குன்றவர் - குறவரும், கானவர் - வேடரும், மள்ளருமே - உழவருமே யாவர், எ-று.

(வி-ரை.) திணை - நிலம். கழி - கடல்சார்ந்த நிலம். கல் - ஆகு பெயர். மருதம் - வயனிலம். நடலை - பொய்நிலம். கோடு - சங்கு. மீன்புல்லர்-மீன்பிடிப்பவர். குன்றவர் - மலைநாட்டிற் சஞ்சரிப்பவர். கானவர் - காட்டிற் சஞ்சரிப்பவர். (சஉ)

## அட்டபோகம்.

மேவுமெண் போகம் விளம்பிற்பெண் ணாடை வியன்கலன்
றூவியற் போசனந் தாம்பூலம் வீசு சுகந்தமன்பி [பாற்
ஞவெழிற் பாட்டலர் மெல்லணை யாமிவை நன்கமைத
ருவிக் கடவு ளருட்பாழிப் பெற்றவர் சார்விடமே.

(ப-ரை.) மேவும் - பொருந்திய, எண் போகம் - அட்டபோகங்களை, விளம்பின் - சொல்லின், பெண் - பெண், ஆடை - வஸ்திரம், வியன் கலன் - மேன்மையாகிய ஆபரணம், தூ இயல் - பரிசுத்தமான இயல்பையுடைய, பால் போசனம் - பாற்சோறு, தாம்பூலம் - தாம்பூலம், வீசு சுகந்தம் - பரிமளிக்கிற நறுமணம், அன்பின் - அன்புடன், நா - நாவிலுண்டாகிற, எழில் பாட்டு - அழகாகிய பாட்டு, மெல்-மென்மையாகிய, அலர் அணை-புஷ்பசயநம், (என்பவைகளே) ஆம் - ஆகும்; இவை - இவையாவும், நன்கு அமைதல் - நன்றாயமைவது, தாவி - தாவி, கடவுள் - கடவுளது, அருள் பாழி - பேரருளை, பெற்றவர் - அடைந்தவர், சார்வு இடம் - அடையுமிடங்களாம், எ-று.

(வி-ரை.) கலன்-கலம் என்பதன் போலி. பாழி - பெருமை.()

## சிற்றின்பமும், பேரின்பமும்.

விடமொன்று மைக்கண்ணி வாட்டமுஞ் சோக மிகுவிகுந்
தடமென் றெருருவரைச் சாற்றுதல் சிற்றின்பந் தன்செயலே
படுகின்ற துன்பப் பிறவியும் போக்கெனப் பண்புடனே
விடமுன் றுணையெனக் கூறுதல் பேரின்ப மென்பதுவே.

(ப-ரை.) விடம் ஒன்றும் - விடத்தன்மையுள்ள, மை-அஞ்சனம எழுதின, கண்ணி - கண்களையுடையவளே! வாட்டமும் - வாடுத லும், சோகம் மிகு விரகும் - துன்பம் அதிகரித்தற்குரிய விரகமும், தடம் என்று - மிகுதியா யிருக்கிறதென்று, ஒருவரை - ஒருவரை, சாற்றுதல் - சொல்லிச் சார்வது, சிற்றின்பம்-சிற்றின்பமாகும்; தன் செயலே - தன் செய்கையினாலேயே, படுகின்ற - உண்டாகிற, துன் பம் - துக்கரூபமாகிய, பிறவியும் - பிறப்பையும், போக்கு என-ஒழிக் கக்கடவையென்றும், பண்புடனே-நற்குணத்துடன், இடம்-எமக்கிட மாவது, உன் துணை என - உன் உதவியேயாமென்றும், கூறுதல் - சொல்லுதல், பேரின்பம் என்பது-பேரின்பமென்று சொல்லப்படுவ தாம், எ - று.

(வி - ரை.) விடமொன்று கண் என வியையும். தன் செயல் என்றது தன் பூர்வகர்மத்தை. கூறுதல் - சொல்லிக் கடவுளைச் சரண் புகல்.

(சச)

ஐச்சுவரியம்-அ; உபசாரம்-கசு; பேறு-கசு.

வேண்டுநற் சுற்ற மிராசாங்க மக்கள்பொன் மேவுமணி
யாண்டிடுந் தொண்டுநெல் வாகன மாமிவை யட்டசெல்வங்
காண்டவி சீதல்கை கால்கழு நீரொடு முக்குடிநீ
ராண்டளித் தேபுன லாட்டனல் லாடை யணிதல்பினே.

(ப - ரை.) வேண்டும் - விரும்பப்படுகின்ற, நல் சுற்றம் - நல் லுறவு, இராசாங்கம் - இராசாங்கம், மக்கள் - பிள்ளைகள், பொன் - சுவர்ணம், மேவும் மணி - அணிதற்குரிய அரதனம், ஆண்டிடும் தொண்டு - ஆளுதற்குரிய அடிமை, நெல்-தானியம், வாகனம்-வாஹ நம், ஆம் - ஆகிய, இவை - இவைகளே, அட்ட செல்வம் - அஷ்டைசு வர்யமாம்; காண் தவிசு ஈதல் - பார்த்தற்குரிய ஆசனம் தருதல், கை கால் கழும் நீரொடு - கைகால்கள் சுத்தி செய்தற்குரிய நீருடனே,

முக்குடி நீர் - முக்குடிநீரை, ஆண்டு அளித்து - அவ்விடத்தே தந்து, நல் ஆடை அணிதல் - சிறந்த ஆடையால் அலங்கரித்தல், பின் - அதன் பிறகு, எ-று.

(வி-ரை) சுற்றம் - ஆகுபெயராய்ச் சூழ்ந்திருப்பவரைக் குறித்தது. இராசாங்கம் - அரசவுறுப்பு. (சரு)

பின்னுமுந் நூலளித் தேதேய்வை பூசற் பிரசமலர்
தன்னைப் புனைத னிசியரி தூவற் றானறைமுன்
னென்னிகர் தீபங்கர்ப் பூர மிடலமு தேந்தல்கொடன்
மன்னடைக் காய்மலர் மந்திரத் தர்ச்சித்தன் மாண்பெனலே.

(ப - ரை ) பின்னும் - அதன் பிறகும், முந்நூல் அளித்து - முப்புரிநூல் கொடுத்து, தேய்வை பூசல் - சந்தநம் பூசுதல், பிரசமலர் தன்னைப் புனைதல்-தேனோடுகூடிய புஷ்பத்தைச் சூட்டல், நிசி அரி தூவல் - அக்ஷதை யிறைத்தல், நறை தரல் - மணப்பொருள் தருதல், முன் - எதிரில், எல் நிகர் தீபம் கர்ப்பூரம் இடல் - சூரியனை நிகர்த்த விளக்கையும் கர்ப்பூரத்தையும் ஏற்றிக்காட்டல், அமுது ஏந்தல் கொடல் - அமுதேந்தித்தரல், மன் அடைக்காய் - மிகுதியாகிய தாம்பூலந்தரல், மந்திரத்து மலர் அர்ச்சித்தல் - மந்த்ரபுஷ்பங்களால் அர்ச்சனை செய்தல், மாண்பு எனல் - மாட்சிமையென்று, எ-று.

(வி - ரை.) கை கால் கழும் நீர் தரல் என்பதை பாத்யம் என்பர் வடநூலார். முக்குடி நீரை ஆசமநம் என்பர். முந்நூல் - பூணூல். எல் - ஆகுபெயர். (சசு)

என்னுமிவ் வீரெட் டுபசார மாம்வலி யேரிளமை
நன்மக்க ளோயின்மை வாழ்நாட் புவிமின் னலனுகர்ச்சி
பொன்னறி வூக்க மிகுகல்வி வெற்றி புகழ்பெருமை
யென்முத லீரெட்டுப் பேறுநற் புண்ணியர் நேர்வனவே.

(ப - ரை.) என்னும் - என்று சொல்லப்படுகிற, இ - இந்த, ஈரெட்டு - பதினாறும், உபசாரம் ஆம் - உபசாரங்களாம்; வலி - வலியும், ஏர்-அழகும், இளமை - பாலியமும், நல் மக்கள்-நல்ல மக்களைப் பெறுதலும், நோய் இன்மை - பிணியில்லாமையும், வாழ்நாள்-ஆயுள், புவி - பூமி, மின் நலன் நுகர்ச்சி - பெண்போக நுகர்ச்சி, பொன் - சுவர்ணம், அறிவு - புத்தி, ஊக்கம்-மனவெழுச்சி, மிகு கல்வி-அதிக கல்வி, வெற்றி - ஜயம், புகழ் - கீர்த்தி, பெருமை-மேன்மை, நெல் - தானியம், முதல் - முதலாகிய, ஈரெட்டு பேறும் - பதினாறுபேறும், நல் புண்ணியர் நேர்வன - சிறந்த புண்ணியவான்கள் பெறுவனவாம், எ - று.

(வி - ரை.) நுகர்ச்சி - அநுபவம். மனவெழுச்சி - உத்ஸாஹம், பேறு - லாபம்.

(௬௭)

அறம் - ௩௨.

வண்ணான்புன் னாவிதன் காதோலை சோலை மடந்தடம்வெண்
சுண்ணம் பறவைப் பிணஞ்சுடற் றூரியஞ் சோறளித்தல்
கண்ணாடி யாவிற் குரிஞ்சுகல் வாயுறை கண்மருந்து
தண்ணீர்ப் பந்த றலைக்கெண் ணெய் பெண்போகந் தலையமே,

(ப - ரை.) வண்ணான் - வண்ணான், புல் நாவிதன்-அற்பமாகிய அம்பட்டன், காதோலை - காதோலை, சோலை - சோலை, மடம் - மடாலயம், தடம் - தடாகம், வெள் சுண்ணம்பு - வெண்மையாகிய சுண்ணம்பு, அறவைப் பிணம் சுடல் - அநாதைப் பிணத்தைத் தகனஞ்செய்தல், தூரியம் - மேளவாத்தியம், சோறு அளித்தல் - அன்னதானம் செய்தல், கண்ணாடி - கண்ணாடி காட்டல், ஆவிற்கு உரிஞ்சு கல் - பசுக்களுக்கு உரிஞ்சுகல் நட்டுவைத்தல், வாயுறை - பிடிப்புல், கண் மருந்து - கண்ணுக்கு மருந்து, தண்ணீர்ப்பந்தல் - தண்ணீர்ப்பந்தல் வைத்தல், தலைக்கு எண்ணெய்-தலைமுழுக்குக்கு எண்ணெய் கொடுத்

தல், பெண்போகம் தால் - மாதர் சுகாநுபவம் கொடுத்தல், ஐயம்-ஐய மிடல், எ-று. (சஅ)

இதுவுமது.

மேதகு மாதுலர்க் குச்சாலே யேறு விடுத்தல்கலே
யோதுவர்க் குண்டி விலங்கிற் குணவோ டுயர்பிணிநோய்க்
கீதன் மருந்து சிறைச்சோ றளித்த லியல்பிறரின்
மாதுயர் காத்தனற் கந்நியர் தானம் வழங்கலுமே.

(ப-ரை.) மேதகும்-மேன்மைபொருந்திய, ஆதுலர்க்கு சாலே - வறியர் தங்குமடம்; ஏறு விடுத்தல்-எருதுவிடுத்தல், கலே ஓதுவர்க்கு உண்டி - சாத்திரம் படிப்பவர்க்கு உணவு, விலங்கிற்கு உணவோடு - மிருகங்களுக்கு ஆஹாரத்துடன், உயர் பிணி நோய்க்கு-பெரிய பிணி நோய்களுக்கு, மருந்து ஈதல் - ஔஷதங் கொடுத்தல், சிறைச்சோறு அளித்தல் - சிறையிலிருப்பவர்களுக்கு அன்னமிடல், பிறர் மா துயர் காத்தல் - அந்நியரது பெருந்துன்பத்தைத் தடுத்தல், நல் கன்னியர் தானம் வழங்கலும் - சிறந்த கன்யாதானஞ் செய்துகொடுத்தலும், எ - று.

(வி - ரை.) வறியர் - தரித்திரர். எருதுவிடுத்தல் - எருது பசுவைப் பொலியவிடுதல். உயர்பிணி-பெரும்பிணி; குட்ட முதலியன. நோய் - சுரமுதலியன. (சகூ)

இதுவுமது.

கற்ற வறுசம யத்தார்க் குண்வு கருதும்விலே
யுற்ற தளித்துயிர் மீட்டல் சிறுருக் குதவனற்பான்
மற்று மகப்பெறு வித்தல் சிறுரை வளர்த்தலெனப்
பெற்ற விவற்றினே யெண்ணுன் கறமெனப் பேசுவரே.

(ப - ரை.) கற்ற-நூல்களைக் கற்றறிந்த, அறு சமயத்தோர்க்கு-ஆறுசமயத்தவர்களுக்கும், உணவு - உணவுதால், கருதும் விலே உற்

றது அளித்து - மதிக்கப்படுகிற தகுதியான விலைகொடுத்து, உயிர் மீட்டல் - உயிர்களை மீள்வித்தல், சிறுருக்கு - சிறுவருக்கு, நல் பால் உதவல் - நல்ல பாலூட்டல், மற்றும் - மேலும், மகப்பெறுவித்தல் - குழந்தைகள் பெறுவித்தல், சிறுரை வளர்த்தல்-குழந்தைகளை வளர்த்தல், எனப்பெற்ற - என்று சொல்லப்பெற்ற, இவற்றினை - இவைகளை, எண்ணான்கு அறம் என-முப்பத்திரண்டு தருமமென்று, பேசுவர் - (அறிஞர்) சொல்வார்கள், எ-று.

(வி-ரை.) சிறுர் - சிறுவர் என்பதன் மரூஉ. (௩௦)

## தசாங்கம்.

வரையாறு நாடு நகரூர் துரக மதகரியே
விரையாரு மாலை முரசம் பதாகைமெய் யாணையென்னு
முரையார் தசாங்கத்தி னெவ்வொன்றை நாடி யுறவகுத்தே
தரையாளு மன்னர் முதலா யெவருக்குஞ் சாற்றுகவே.

(ப - ரை.) வரை - மலை, யாறு - நதி, நாடு - தேசம், நகர் - நகரம், ஊர் துரகம் ஏறி நடத்துதற்குரிய குதிரை, மதகரி-மதயானை, விரை ஆரும் மாலை-மணமுள்ள பூமாலை, முரசம்-பேரிகை, பதாகை-கொடி, மெய் ஆணை உண்மையாகிய ஆக்கினை, என்னும் உரை ஆர் என்று சொல்லப்பட்ட, தசாங்கத்தின் - தசாங்கங்களில், ஒவ்வொன்றை நாடி - ஒவ்வொன்றையும் ஆராய்ந்து, தரை ஆளும் - உலகத்தையாளுகிற, மன்னர் முதலாய் - அரசர் முதலாகிய, எவருக்கும் - யாவருக்கும், சாற்றுக - சொல்லுக, எ-று.

(வி - ரை.) ஊர்தல் - ஏறிநடத்தல் (சவாரி செய்தல்). துரகம் - வடசொற்றிரிபு. மதகரி யென்பதும் அது. மாலை - மாலா என்னும் வடசொற்றிரிபு. முரசம்-முரஜம் என்னும் வடசொற்றிரிபு. பதாகை-பதாகா என்னும் வடசொற்றிரிபு. ஆணை - ஆஜ்ஞா என்னும் வட

சொற்றிரிபு. தசாங்கம் - பத்து உறுப்பு; இதுவும் வடசொற்றிரிபு; தசம் அங்கம் எனப் பிரித்துக்கொள்க. (௩க)

## அட்டமங்கலம்.

சாற்றுங் கவரி நிறைகுடந் தோட்டிமுன் றர்ப்பணமா
மேற்றிய தீப முரசம் பதாகை யிணைக்கயலே
நாற்றிசை சூழ்புவி மீதட்ட மங்கல நன்குழையின் [திருவே.
மேற்றிகழ் வேற்றடங் கட்செய்ய வாய்ப்பைம்பொன் மெய்த்

(ப - ரை.) சாற்றும் - சொல்லப்பட்ட, கவரி - சாமரம், நிறைகுடம் - நிறைநீர்க்குடம், தோட்டி - அங்குசம், முன் தர்ப்பணம் - எதிரில் வைக்கப்பட்டிருக்கிற கண்ணடி, ஏற்றிய தீபம் - கொளுத்தப்பட்ட விளக்கு, முரசம் - பேரிகை, இணைக்கயல்-இரட்டைமீன், (என்பவைகளே) நாற்றிசை சூழ்-நான்கு திக்குகளாலும் சூழப்பட்ட, புவிமீது - பூலோகத்தில், அட்டமங்கலம்-அஷ்டமங்கலப் பொருள்களாம்; நல் - அழகிய, குழையின்மேல் - காதணியின்மேற் சென்று, திகழ் - விளங்குகிற, வேல் - வேற்படைபோன்ற, தடம் கண்-விசாலமான கண்களையும், செய்ய வாய் - செவந்த அதரத்தையும், பைம்பொன் மெய்-பசும் பொன்னிறமான மேனியையுமுடைய, திருவே- திருவே, எ - று.

(வி - ரை.) தர்ப்பணம்-வடசொல். தீபம் - வடசொல். அட்டமங்கலம் - வடசொற்றிரிபு; எட்டு மங்களப்பொருள்கள் என்பது பொருள். (௩உ)

## ஆடவர்ச் சிறப்புவமை.

திருமான் முருக னளகேச னிந்திரன் சேண்முகிலே
பொருமாரன் வீமன் விசயன்மெய்க் கன்னன் புகழ்த்தருமன்
வருமான சீவகன் மூவேழு வள்ளல் வனசநிதி
தருமா மணிசங்கந் தேனுவைப் போலவுஞ் சாற்றுவதே.

(ப - ரை.) திருமால் - லக்ஷ்மீநாதனாகிய ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி, முருகன் - குமாரவேள், அளகேசன் - குபேரன், இந்திரன் - தேவராஜன், சேண் முகில் - ஆகாசத்தில் சஞ்சரிக்கிற மேகம், பொரும் மாரன் - விரகிகளோடு போர்செய்கிற மன்மதன், வீமன் - வீமசேநன், விசயன் - அருச்சுநன், மெய் கன்னன் - சத்தியசந்தனாகிய கர்ணன், புகழ் தருமன் - கீர்த்திமானாகிய தர்மநந்தனன், வரும் மானம் சீவகன் - நாளுக்குநாள் வளருகிற பெருமையையுடைய சீவகன், மூவேழு வள்ளல் - இருபத்தொரு வள்ளல்கள், வநசநிதி - பத்மநிதி, தரு - பஞ்சதருக்கள், மா மணி - பெருமையுள்ள சிந்தாமணி, சங்கம் - சங்கநிதி, (ஆகிய இவைகளுக்கு உவமையாகச் சொல்லுவதேயன்றி) தேனுவைப்போலவும் - காமதேநுவை நிகராகவும், சாற்றுவது - (ஆடவரைப் புகழ்ந்து) சொல்லுவதுண்டு, எ - று.

(வி - ரை.) முருகன் - கட்டிளமையோன். அளகேசன் - அளகாபுரிக்கு அரசன். அளகாபுரி - தேவலோகத்திலுள்ள செல்வப் பெருக்கையுடைய ஓர் நகரம். மாரன்-மாரः என்னும் வடசொற்றிரிபு. வீமன்-பீமः என்னும் வடசொற்றிரிபு; இதற்குக் கண்டோர்க்கு பயமுண்டாக்குவோன் என்பது பொருள். மூவேழுவள்ளல்களாவார் - முதலெழுவள்ளல், இடையெழுவள்ளல், கடையெழுவள்ளல் என மூவகையராவர். இவருள்: குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி என்பவர் எழுவரும் முதலெழுவள்ளல்களென்று சொல்லப்படுவர். அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சக்திமான், சிசுபாலன், தத்தவக்கிரன் என்பவர் எழுவரும் இடையெழு வள்ளல்களென்று சொல்லப்படுவர். எழிலி, ஓரி, காரி, கள்ளி, பாரி, பேகன், மலையன் என்பவர் எழுவரும் கடையெழு வள்ளல்களென்று சொல்லப்படுவர். வனசநிதி - தாமரையுருவாயுள்ளது; இதனைப் பதுமநிதி யெனவும் வழங்குவர். தரு - கற்பகத்தரு. மா மணி - சிந்தாமணி. சங்கநிதி-இது சங்குருவாயுள்ளது. தேநு - காம

தேறு; இவை வேண்டுவோர் வேண்டியவற்றைத் தருவன; இவற்றை நவநிதியென்பர்; இவை விண்ணுலகத்தில் தேவேந்திரன் வசத்திலும் குபேரன் வசத்திலும் இருப்பனவாம். (ருங)

மடவார்ச்சிறப்புவமை.

வதியுமின் னார்தமைப் பேசத் திருவுமை வாணிமதி
ரதியையும் பற்பதி வாழுமற் றோரை யரம்பையரை
மதிதரு மான்பிடி யன்னங் குயில்கிள்ளை மாமயிலைப் [வே.
பொதியவொப் பார்படை யாவா ரெழின்மதன் போர்செய்ய

(ப - ரை.) வதியும் - (உலகத்தில்) வாழ்கிற, மின்னார்தமை - மாதரை, பேச-சொல்லுமிடத்து, திரு - இலக்குமி, உமை-பார்வதி, வாணி-சரசுவதி, மதிரதியையும் - யாவராலு மதிக்கத்தக்க ரதிதேவியையும், பல் பதி வாழும் மற்றோரை-பலநகரங்களில் வாழ்கிற மற்ற மாதரையும், அரம்பையரை - அரம்பைப்பெண்களையும், மதிதரும் - மதித்தற்குரிய, மான் - பெண்மான், பிடி - பெண்யானை, அன்னம்-அன்னப்பறவை, குயில்-குயில், கிள்ளை - கிளி, மா மயிலை-பெருமையுள்ள மயிலை, பொதிய - உவமையாகப் புனைந்துரைக்க, ஒப்பார் - ஒப்பாவர், எழில் மதன்-அழகிய மன்மதன், போர் செய்ய - சண்டை செய்வதற்கு, படை ஆவார் - சேனையுமாவர், எ-று.

(வி - ரை.) உமை - உமா என்னும் வடசொற்றிரிபு. வாணி - வடசொல். ரதி - இரதி (மன்மதன் மனைவி). அரம்பையர் - தெய்வப் பெண்கள். மான் - மருண்டபார்வைக்குவமை. பிடி, அன்னம் இரண்டும் நடைக்குவமை. குயில், கிள்ளை இரண்டும் சொல்லுக்குவமை. மயில் சாயலுக்குவமை. விரிவஞ்சி இம்மட்டில் நிறுத்தலாயிற்று. ()

சிவன் பெருமை.

போராடு வேளை விழிபழ லேவிப் பொடிப்படுத்தி
நேரார் புரத்தை நகையா லெரித்து நிலாவணிந்து

காராழி நஞ்சுண்டு தக்கன்றன் வேள்வி கடிந்தரக்க
ஞோத் தலைநெரித் தேசண்டன் வீழ வுதைத்தனனே.

(ப-ரை) போராடு வேளை - போர்செய்யவந்த மன்மதனை, விழி அழல் ஏவி - கண்ணெருப்பையேவி, பொடிபடுத்தி - நீருக்கி, நேரார் புரத்தை-பகைவரது முப்புரத்தை, நகையால் எரித்து - சிரிப்பினுலெரித்து, நிலா அணிந்து - சந்த்ரகண்டத்தைத் தரித்து, கார் ஆழி நஞ்சு உண்டு-பாற்கடலிற்பிறந்த கரியவிடத்தை அமுதுசெய்து, தக்கன் வேள்வி கடிந்து - தக்கனதுயாகத்தை அழித்து, அரக்கன் - ராக்ஷஸனுகிய ராவணனது (கொடுமையை), ஓரா - அறிந்து, தலை - அவனது சிரங்களை, நெரித்து - நெரியச்செய்து, சண்டன் - யமன், வீழ - மலையின்கீழே விழும்படி, உதைத்தனன்-உதைத்தருளினன், எ-று.

(வி-ரை) கார்நஞ்சு எனவியையும், ஓர்தல் - ஆராய்ந்தறிதல்; ஓர்-பகுதி. சண்டன் வீழவுதைத்தது, அவன் கைலாயமலையை அசைத்தெடுத்தகாலத்தில்; "அன்றிலங்கையர்கோன் மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம்பலவர்" என்னும் மணிவாசகர் திருவாக்கினுலும் இது விசதமாம். (ருரு)

உதிக்குங் கடவுட் கதிரோன்றன் பல்லை யுறவுதிர்த்து
விதிக்குத் தலையைத் திருகித் தகர்வரும் வெங்கனற்கு
மதிக்குங் காமறுத் திந்துவைத் தேய்த்துயர் வாணிதுண்டஞ்
செதிக்கும் படிதள்ளி யிமத்துட் டாண்டவஞ் செய்தனனே.

(ப-ரை.) உதிக்கும்-உதிக்கின்ற, கடவுள்-தெய்வத்தன்மையுள்ள, கதிரோன்-சூரியனது, பல்லை-பற்களை, உற உதிர்த்து - மிகுதியாக வுதிர்த்து, விதிக்கு - பிரமனது, தலையை திருகி - சிரசைத் திருகி, தகர்வரும் - ஆட்டின்மேலேறிவருகிற, வெம் கனற்கு - வெப்பத்தை

யுடைய அக்கினிதேவனது, மதிக்கும் - மதித்தற்குரிய, கரம் அறு த்து - கையைச்சேதித்து, இந்துவை தேய்ந்து-சந்திரனைத்தேய்த்து, உயர் - உயர்ந்த, வாணி - சரசுவதியின், துண்டம் - மூக்கை, செதிக் கும்படி சேதிக்கும்படி, தள்ளி-உந்தி, ஈமத்துள்-மயானத்தில், தாண்ட வம்செய்தனன் - நடனஞ்செய்தான், எ-று.

(வி-ரை) கதிரோன் பல்லையுதிர்த்தது தக்கயாகத்தை யழித்த காலத்தில்; "சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை, வாரி நெரித்த வா றந்தீபற" "எதிர்ந்தபகல் குன்றப் பல்லுகுத்தோன்" "அந்தரத்தே செல்லும் அலர்கதிரோன் பற்றகர்த்து" என்னும் மணிவாசகர் திரு வாக்கானும், "பண்டங்கன்வந்து பலிதாவென்றான் பகலோற்கிடென் றேன்" என்னும் சேரமான்பெருமாணாயனார் திருவாக்கினாலும் இது விளங்கும். விதிக்குந் தலையைத் திருகினது, உமாதேவியார் தம் தோழியரோடு ஏகாந்தமாய் விளையாடிக்கொண் டிருந்தகாலத்தில் பிரமன் வந்தபோது. வெங்கனற்குமதிக்குங் கரமறுத்ததும், இந்து வைத் தேய்த்ததும், வாணி துண்டம் சேதித்ததும் தக்கன் யாகசங் காரகாலத்தில். (நிசு)

தாண்டவஞ் செய்து தழலுரு வாகித் தரையிடந்து
கீண்டவ னுக்குந் தெரிவரி தாயள கேசனுக்கு
வேண்டிய சங்க நிதிமுத லாக வியந்தளித்த
காண்டகுஞ் சோதியென் பார்க்கெய்து மேகலை மாதவமே.

(ப-ரை.) தாண்டவம் செய்து-நடனஞ்செய்து, தழல் உரு ஆகி- நெருப்புருவமாகி, தரை - பூமியை, இடந்துகீண்டவனுக்கும்-தோண் டிச்சென்றவனாகிய திருமாலுக்கும், தெரிவு அரிது ஆய்-காண்பதற் கரிதாயிருந்து, அளகேசனுக்கு - குபேரனுக்கு, வேண்டிய - அவசிய மாகிய, சங்கநிதிமுதலாக-சங்கநிதி முதலானவற்றை, வியந்து அளி த்து - அன்போடுதந்தருளின, காண்டகும் சோதி - தரிசித்தற்குரிய

ஒளியுருவே, என்பார்க்கு - என்று துதிப்பவர்க்கு, கலை - கலாநிதியும், மாதவம்-பெரிய தபோநிதியும், எய்தும்-வந்துசேரும், எ-று.

(வி - ரை.) தழலுருவானது பிரமவிட்டுணுக்கள் தம்மில் மாறுபட்டு நான் பெரியன், நான் பெரியன் என்று சண்டைசெய்தபோது அவர்களை விலக்குதற்கென்க. தரையிடந்து கீண்டவன் - விட்டுணு. கலாநிதி - கல்விச்செல்வம். தபோநிதி - தவச்செல்வம். (ருஎ)

மாதவர் வேள்வி புரிந்தே விடுத்த வரியரவு
போதகம் வேங்கை மழுமான் முயலகன் பொங்கனலென்
றோதரும் வெம்பகை வீறொழித் தேதன் னுருவமைத்த
காதணி சங்கக் குழையான் சரணங் கருதுமினே.

(ப - ரை) மா தவர் வேள்வி புரிந்து விடுத்த-பெரிய தவசிகள் யாகஞ்செய்து ஏவின, வரி அரவு - நீண்ட பாம்பு, போதகம் - யானை, வேங்கை - புலி, மழு - மழு, மான் - மான், முயலகன் - முயலகன், பொங்கு அனல் - சுடுகிற நெருப்பு, என்று ஓது - என்று சொல்லப்பட்ட, அரு - வெல்லுதற்கரிதாகிய, வெம் பகை - கொடிய சத்துருக்களை, வீறு ஒழித்து-மேன்மையை நீக்கி, தன் உரு அமைத்த காது-தன்னுருவத்தி லமைத்துக்கொண்டிருக்கிற காதினிடத்து, அணி - தரித்திருக்கிற, சங்கக்குழையான் - சங்கத்தோட்டினையுடையவனது, சரணம் - திருவடியை, கருதுமின் - நினையுங்கள், எ-று.

(வி - ரை.) மாதவர் என்றது தாருகாவனத்திருடியரை. சரணம் - வடசொற்றிரிபு. (ருஅ)

மின்னும் பவளமுஞ் செவ்வானும் வேணிமெய் யூர்தியுடன்
றுன்னுங் கொடிவிடை யேந்தல் கபாலந் துடிசுடர்மான்
மன்னுங் கொடுங்கதிர்ச் சூலா யுதம்படை மாதவற்கு
முன்னந் திகிரி யளித்தோன் முடித்தது முற்கங்கையே.

(ப - ரை.) மின்னும் - மின்னலும், பவளமும் - ப்ரவாளமும், செவ்வானும் - அந்திவானமும், வேணி - சடையும், மெய்-திருமேனியும், ஊர்தியுடன் துன்னும் அ கொடி விடை-வாகநத்தோடு பொருந்தின துவசம் இடபம், ஏந்தல் - கையிலேந்தியிருப்பது, கபாலம்-தலையோடு, துடி - உடுக்கை, சுடர் - மழு, மான் - மான், மன்னும்-நிலைபெற்ற, கொடுங்கதிர் - மிக்க ஒளியையுடைய, சூலாயுதம் - சூலாயுதப்படை, மாதவற்கு - திருமாலுக்கு, முன்னம் - முற்காலத்தில், திகிரி அளித்தோன் - சக்ராயுதத்தைக் கொடுத்தவன், (இவன்) முன் முடித்தது - முற்காலத்தில் முடித்தது, கங்கையே - கங்காநதியேயாம், எ - று.

(வி - ரை.) வேணி - வடசொல். கபாலம் - வடசொல். (ருக)

கங்கையும் வில்வமு மென்பு மராவுங் கடுக்கையும்வெண்
டிங்களுந் தும்பையு மாரு மெருக்குந் திகழறுகும்
பங்கய னன்னத் துருவாகி நாடிப் பறந்தறியா
வெங்கள் பிரான்பவ ளச்சடை மீதணிந் தேர்பெற்றவே.

(ப-ரை) பங்கயன் - பிரமன், அன்னத்து உரு ஆகி - அன்ன வடிவுகொண்டு, நாடி பறந்து-தேடிப்பறந்து, அறியா - அறியாது, எங்கள் பிரான் - எங்கள் பெருமான், பவளச்சடைமீது அணிந்து-செஞ்சடைமீது தரித்த, ஏர் பெற்ற-அழகுபெற்றன யாவையெனின், கங்கையும் - சங்காநதியும், வில்வமும் - வில்வத்தழையும், என்பும்-எலும்பும், அராவும் - பாம்பும், கடுக்கையும் - கொன்றைமலர்மாலையும், வெள் திங்களும் - வெண்மையாகிய சந்த்ரகண்டமும, தும்பையும் - தும்பைமலரும், ஆரும் - ஆத்திமலர்மாலையும், எருக்கும் - எருக்கம் பூமாலையும், திகழ் - விளங்குகிற, அறுகும் - அறுகம்புல்லும், (ஆம்) எ - று.

(வி-ரை.) கங்கை - கங்கா என்னும் வடசொற்றிரிபு. எருக்கு - அர்க்கம் என்னும் வடசொற்றிரிபு. பங்கயன் - பங்கஜ: என்னும் வடசொற்றிரிபு. பிரான் - உபகாரசீலன். (சூ0)

## விநாயகன் பெருமை.

### வெண்பா.

தேய்ந்த தினிவளருஞ் செல்வப் புகழுறுமென்
றுய்ந்து மதிபொதியு மச்சடைபோற்—றோய்ந்தநிறச்
செந்துவர்மா மேனியெழிற் செல்வன் கழன்மலரில்
வந்திறைஞ்சு மன்பரெனும் வண்டு.

(ப-ரை) தேய்ந்தது-குறைந்தது, இனி வளரும்-இனிவளரும், செல்வப்புகழ் உறும் என்று-மிக்க கீர்த்தியுண்டாகும் என்று, ஆய்ந்து-ஆராய்ந்து, மதி பொதியும் - பிறைதங்கியிருக்கிற, அ - அந்த, சடைபோல் - சடையைப்போல, தோய்ந்த நிறம் - பொருந்திய நிறத்தையுடைய, செந்துவர் - செம்பவளம்போன்ற, மா மேனி-அழகிய திருமேனியின், எழில்-அழகு வாய்ந்த, செல்வன் - விநாயக மூர்த்தியின், கழல் மலரில் - திருவடியாகிய தாமரைமலரில், அன்பர் என்னும் - அன்பர் என்கிற, வண்டு - வண்டுகள், வந்து இறைஞ்சும் - வந்து வணங்கும், எ - று.

(வி-ரை.) துவர்-பவளம். கழல் என்ற குறிப்பால் மலர் தாமரை மலரைக் குறித்தது. இறைஞ்சல்-வணங்கல்; பகுதி இறைஞ்சு. (சூக)

வண்டார் மதப்பிரச வல்விலங்கு கிப்புரிதூண்
டண்டார் புழைச்சிந் துரத்தடக்கைத்—துண்டக்
கழைமருப்புச் செங்கட் கறையடிவெங் கோபக்
குழைசெவிநால் வாய்க்குஞ் சரம்.

(ப-ரை.) வண்டு - வண்டுகள், ஆர்-நிறைந்து மொய்க்கிற, மதப் பிரசம் - மதமாகிய தேனையுடைய, வல் விலங்கு-வலிய மிருகம், கிம்புரி - பூண், தூண் தண்டு - கட்டுத்தறி, ஆர் புழை - பெரியதொளை யுள்ள, சிந்துரம் - யானையின், தடக்கை - பெரிய துதிக்கை, துண்டக் கழை மருப்பு - துண்டித்த மூங்கில்போலுங் கொம்பும், செம் கண் - செவந்த கண்களும், கறை அடி - உரல்போலும் பாதமும், வெம் கோபம் - கொடுங்கோபமும், குழை செவி - தழைத்தகாதும், நால் வாய் - தொங்குகிற வாயும் உள்ள, குஞ்சரம் - யானை, எ - று.

(வி - ரை.) கிம்புரி - வடசொல். கறை - உரல். நாலல் - தொங்கல்; பகுதி - நால். குஞ்சரம் - வடசொற்றிரிபு; இதற்குக் காட்டுப் புதல்களில் சஞ்சரிப்பதென்பது பொருள். (சுஉ)

## முருகன் பெருமை.

சரவணத்து தித்தாறு தாயர்மகிழ் சண்முகனோர்
குரவனென வீசற்கு மார—னரிகுறவ
ரிந்திரற்கு மாமருக னேந்தயிலோன் மாமயிலோன்
கந்தன்சே வற்றுவசன் காண்.

(ப-ரை.) சரவணத்து - சரவணப்பொய்கையில், உதித்து - அவதரித்து, ஆறு தாயர்-ஆறு தாய்மார்கள், மகிழ் - சந்தோஷித்தற்குரிய, சண்முகன் - ஆறுமுகன், ஓர் குரவன் என-ஒரு குருவென்று சொல்லும்படி, ஈசன் குமாரன் - சிவகுமாரனானவன், அரி - திருமால், குறவர் - வேடர், இந்திரற்கு - இந்திரன் என்பவர்களுக்கு, மா மருகன் - அழகிய மருமகன், ஏந்து அயிலோன் - வேற்படையைத் தாங்கினவன், மா மயிலோன் - பெரிய மயில்வாகநத்தை யுடையவன், கந்தன் - கந்தன், சேவல் துவசன் - கோழிக்கொடியையுடையவன், எ - று.

(வி-ரை.) சரவணப்பொய்கை - நாணற்காடு அடர்ந்த தடாகம். உதித்து என்பதற்கு பகுதி உதி. ஆறு தாய்மார் - கார்த்திகை மாதர்களாகிய வாறுபேர். துவசம்-த்வஜம் என்னும் வடசொற்றிரிபு. (௬௩)

காணுஞ் சசிமகளைக் கானவளைக் கைப்பற்றி
நாணவய னிந்திரனன் னாடுறவே—பூணு
முரண்சூர்ச்செற் றக்கடம்பின் மொய்ம்பனடி யார்க்குக்
கருணைபெரு கின்பக் கடல்.

(ப-ரை.) காணும் - காணப்படுகிற, சசி மகளை - இந்திராணியின் மகளாகிய தெய்வயானையையும், கானவளை - வேடிச்சியாகிய வள்ளியையும், கைப்பற்றி - கைபிடித்து, அயன் நாண - பிரமன் நாணும்படியும், இந்திரன் - இந்திரனானவன், நல் நாடு உற - நல்ல நாட்டைப் பெறும்படியாகவும், பூணும் முரண் - வலிமையைக்கொண்ட, சூர் - சூரபன்மனை, செற்ற - கொன்ற, அ - அந்த, கடம்பின் - கடப்பமலர் மாலையை யணிந்த, மொய்ம்பன் - புயங்களையுடையவன், அடியார்க்கு - தன் தொண்டருக்கு, கருணை பெருகு - கிருபைவெள்ளத்தைப் பெருக்குகிற, இன்பக்கடல் - ஆநந்தசாகரம், எ-று.

(வி-ரை) சசி. ஶசி என்னும் வடசொற்றிரிபு. கானவள் - காட்டிற்சஞ்சரிப்பவராகிய வேடர் மகள். செற்று என்பதற்கு பகுதிசெறு. கடம்பு - ஆகுபெயர். மொய்ம்பு - புயம். (௬௪)

## திருமாலின் பெருமை.

### நெடில்விருத்தம்.

கடலிற் றுயின்றுங் கடலடைத்துங்
கடலைக் கடைந்துங் கடல்சுவறக்
கணைதொன் றேவிக் கடற்புவனங்
கடந்துஞ் சரணென் றுலளந்து

முடலைக் குறைத்தும் புவியிடந்துண்
டுமிழ்ந்து முடலைச் சகடுதைத்து
மூரிக் களிறோ டிணைமருத
முனிந்தும் விளவிற் கன்றெறிந்து
மடலுற் றெதிர்ந்து பொருங்குருகி
னலகை யிடந்துங் கலைகவர்ந்து
மாயர் குலத்தில் வந்துதித்து
மசுரர் கிளையை வேரறுத்து
மிடலுற் றலகை முலைபருந்தி
யான்பா லிழுது வெண்ணெய்தயி
ரெடுத்தாங் கருந்திப் பதினறு
யிரவர் குரவை கொண்டானே.

(ப-ரை.) கடலில் - பாற்கடலில், துயின்றும் - நித்திரை செய்தும், கடல் அடைத்தும் - கடலை அணைகட்டித் தடுத்தும், கடலைக் கடைந்தும் - பாற்கடலைக் கடைந்தும், கடல் சுவற - கடல் வற்றும் படி, கணை ஒன்று ஏவி - ஒருபாணம் விட்டு, கடல் புவனம் கடந்தும் - கடல்சூழ்ந்த மண்ணுலகத்தைத் தாவியும், சரண் ஒன்றால் அளந்தும் - ஒரு திருவடியால் அளந்தும், உடலை குறைத்தும் - சரீரத்தைக் குறுக்கியும், புவி - மண்ணை, இடந்து - தோண்டி, உண்டு - விழுங்கி, உமிழ்ந்தும் - கக்கியும், முடலை சகடு உதைத்தும் - பொய்ச்சகடத்தை உதைத்தும், மூரி களிறோடு - வலிமிகுந்த யானையுடன், இணை மருதம் முனிந்தும் - இரண்டு மருதமரங்களை முறித்தும், விளவில் கன்று எறிந்தும் - விளாமரத்தின் மீது கன்றையெடுத்தெறிந்தும், அடல் உற்று - வலிமிகுந்து, எதிர்த்து பொரும் - எதிர்த்துப் போர்செய்த, குருகின் - கொக்கினது, அலகை இடந்தும் - வாயலகைக் கிழித்தும், கலை கவர்ந்தும் - வேதங்களை மீட்டும், ஆயர் குலத்தில் வந்து உதித்தும் -

இடையர்சாதியில் வந்து அவதரித்தும், அசுரர் கிளையை வேர் அறுத்தும் - ராக்ஷஸ கூட்டத்தை வேரோடறுத்தும், மிடல் உற்ற - வலி மிகுந்த, அலகை - பூதனையின், முலை அருந்தி - முலையுண்டு, ஆன்பால் - பசுவின்பால், இழுது - நெய், வெண்ணெய் - வெண்ணெய், தயிர் - தயிர், ஆங்கு - அவ்விடத்தில், எடுத்து அருந்தி - திருடியுண்டு, பதினறுயிரவர் - பதினறுயிரவராகிய கோபிகைகளோடு, குரவை கொண்டான் - குரவைக்கூத்தாடினன், எ - று.

(வி-ரை.) துயின்றும் என்னும் வினை வருதலால் கடல் என்றது பாற்கடலைக்குறித்தது. அடைத்தும் என்னும் வினை வருதலால் கடல் என்றது உவர்க்கடலைக்குறித்தது. கடைந்தும் என்னும் வினை வருதலால் கடல் என்றது பாற்கடலைக்குறித்தது. கணையொன்றேவி என்னும் வினை வருதலால் கடல் என்றது உவர்க்கடலைக்குறித்தது. புவனங்கடந்து என்னும் வினையும் சரண் ஒன்று லளந்தும் என்னும் வினையும், உடலைக்குறைத்தும் என்னும் வினையும், இடந்து உண்டு உமிழ்ந்தும் என்னும் வினைகள் வருதலால் புவனங் கடந்ததும் அளந்ததும் உடலைக்குறைத்ததும் வாமனவதாரத்தில் என்றும், புவி இடந்து உண்டு உமிழ்ந்து என்றது சர்வசம்ஹாரகாலத்தில் என்றும், சகடு உதைத்தும், மூரிக்களிறேருடிணை மருதமுனிந்தும், விளவிற்கன்றெறிந்தும், அடலுற்றெதிர்ந்து பொருங்குருகி னலகையிடந்தும் என்பனவமுதல் குரவை கொண்டான் என்பதுவரையில் கிருஷ்ணவதாரத்தில் நிகழ்ந்தவை என்றுங் கொள்க. (கூறு)

குரவை குணித்து விளையாடிக்
குன்று குடையா யெடுத்தொருகாற்
கொண்ட றடுத்து வேயூதிக்
கோவிற் றுயின்று நிரையினமேய்த்
தாவி னடித்து வருமுல்லை
யாயர் தலைவன் யமுனைபினீ

ராடுஞ் சிறிய கருஞ்சிறுக்க
னளிக்க மகவை யந்தணற்காய்
விரைவி னழைக்க யமபுரம்போய்
மீண்ட குரிசிற் றிகிரியினுல்
வெயிலை மறைத்து வலம்புரிவாய்
விட்டு மதமா வெங்காவாற்
பாவி யழைக்க வந்தருளிப்
பார்த்தன் றனக்குத் தேர்கடவிப்
பரிந்து போற்றத் துகிலிழந்த
பாஞ்சா லிக்கு மளித்தானே.

(ப-ரை) குரவை குனித்து விளையாடி - குரவைக் கூத்தாடி, குன்று குடையா எடுத்து - மலையைக் குடையாயெடுத்து, ஒருகால் கொண்டல் தடுத்து - ஒருதாம் மேகத்தைத் தடைசெய்து, வேய் ஊதி - வேய்ங்குழலை ஊதி, கோலில் துயின்று - மாட்டாங்கோல் மேல் தூங்கி, நிரை இனம் மேய்த்து - பசு மந்தையை மேய்த்து, அரவில் நடித்து - பாம்பின் படத்தின்மீது நடனஞ்செய்து, வரும் - வளாநின்ற, முல்லை - முல்லைநிலத்தில் வாழ்ந்த, ஆயர் தலைவன் - இடையர் வேந்தன், யமுனையில் - யமுனாநதியில், நீர் ஆடும் - நீர் ஆடுகின்ற, சிறிய - சிறியதாகிய, கரு - கருநிறமுள்ள, சிறுக்கன் - சிறுவன்; அந்தணற்காய் - சாந்திபன் என்னும் பிராமணனுக்காக, மகவை - அவன் புத்திரனை, அளிக்க - கொண்டுவந்து கொடுக்க, விரைவின் அழைக்க - சீக்கிரமாக அழைக்கும்பொருட்டு, யமபுரம் போய் - எமபட்டணத்திற்குச் சென்று, மீண்ட - திரும்பிவந்த, குரிசில் - பெரியோன், திகிரியினுல் - சக்கிராயுதத்தால், வெயிலை மறைத்து-சூரியனை மறைத்து, வலம்புரி-வலம்புரிச்சங்கத்தை; வாய்விட்டு-வாயில் வைத்து ஊதி, மத மா - மதயானையானது, வெம் காவால் -

கொடிய முதலையினால், பரவி யழைக்க - தோத்திரஞ்செய்து கூவ, வந்தருளி - எழுந்தருளி, பார்த்தன் தனக்கு - அர்ச்சுனனுக்கு, தேர் கடவி - தேரைச்செலுத்தி, பரிந்து போற்ற-வருந்தி வணங்க, துகில் இழந்த - ஆடையிழந்த, பாஞ்சாலிக்கும் - திருபதைக்கும், அளித்தான் - கிருபை செய்தான், எ - று.

(வி - ரை.) குரவை - ஒரு கூத்து; அதாவது கைகோத்தாடல். குன்று குடையாயெடுத்தது என்றது கோவர்த்தனமலையை குடையாக எடுத்த கதையைக் குறித்தது. கொண்டல் தடுத்து என்றதும் அது. கோல் - மாட்டால்கோல் என்றதை. அரவு என்றது காளிங்கன் என்ற பாம்பை. வெயில்-ஆகுபெயர். கா - முதலை. பார்த்தன் - பிரதையின் புத்திரன், (பிரதை - குந்திதேவி). கடவல் - செலுத்தல். பாஞ்சாலி - பாஞ்சாலதேசத்தரசன் மகள். (சுசு)

அளிக்குஞ் சிறுசே ஞருவெடுத்து
மரிய மறையை முன்கொணர்ந்து
மாமை யுருக்கொண் டடைகிடந்து
மாதி வராக வுருவெடுத்துங்
களித்துத் தூணின் மடங்கலுருக்
காட்டிக் கனக னுடல்பிளந்துங்
கடும்போர் வலிய மாவலியைக்
காலி னடக்கிப் புவிகவர்ந்தும்
வளிக்கூந் தொலையா முதுமதுகை
வாணன் புயமா யிரமறுத்தும்
வஞ்சக் கஞ்ச னுடல்செகுத்தும்
வனம்போ யரசு துரந்திருந்தும்

குளிக்குஞ் சாத்தாற் றாடகையைக்
கொன்று மிகல்வா லியைக்கடிந்துங்
கொடிய கவந்தன் புயந்துணித்த
கொண்டன் முள்ளங் குடிதங்கும்.

(ப-ரை.) அளிக்கும் - உலகத்தை ரக்ஷிக்கிற, சிறு-சிறிய, சேல் உரு எடுத்தும் - மச்சாவதாரம் எடுத்தும்; அரிய மறையை - அருமையான வேதங்களை, முன் - முற்காலத்தில், கொணர்ந்தும் - கொண்டு வந்தும்; ஆமை உரு கொண்டு - கூர்மாவதாரம் எடுத்து, அடை கிடந்தும் - அடைகாத்தும்; ஆதிவராக உருவெடுத்தும் - முதன்மையாகிய வராக உரு எடுத்தும்; தூணில் - பொற்கம்பத்தில், களித்து - மகிழ்ந்து, மடங்கல் உரு காட்டி - சிங்கரூபங்கொண்டு, கனகன் - இரணியனது, உடல் - மார்பை, பிளந்தும் - கிழித்தும்; கடும் போர்-கொடிய யுத்தம் செய்தற்குரிய, வலிய - வலிமிகுந்த, மாவலியை - மகாபலிச் சக்கிரவர்த்தியை, காலின் அடக்கி - திருவடியில் அடக்கி, புவி கவர்ந்தும் - பூலோகத்தைக் கவர்ந்துகொண்டும்; வளிக்கும் தொலைபா-வாயு பகவானுக்கும் தோல்வியடையாத, முது மதுகை - முழுவலியையுடைய, வாணன் - வாணாசுரனது, ஆயிரம் புயம் - ஆயிரம் தோள்களை, அறுத்தும் - கண்டித்தும்; வஞ்சம் - வஞ்சனையுள்ள, கஞ்சன் - கம்ஸனது, உடல் - சரீரத்தை, செகுத்தும் - நொறுக்கியும், அரசு துரந்து - ராஜ்யபாரத்தைவிட்டு, வனம்போய் இருந்தும் - காட்டிற் சென்று தங்கியும்; குளிக்கும் - குறிபிழையாமற் சென்று தைக்கிற, சாத்தால் - அம்பினால், தாடகையைக் கொன்றும் - தாடகை என்னும் ராக்ஷசியைக் கொலைபுரிந்தும்; இகல் வாலியைக் கடிந்தும் - வலியிற் சிறந்த வாலியை ஜெயித்தும்; கொடிய கவந்தன் - கொடியவனை கவந்தனென்னும் அரக்கனது, புயம்-தோள்களை, துணித்த-அறுத்த, கொண்டல் - மேகவண்ணன், முள்ளங்குடி தங்கும் - முள்ளங்குடியில் வசிப்பவன், எ - று.

(வி-ரை.) அடைகிடத்தல் - அவயங்காத்தல். மடங்கல் - சிங்கம் (நரசிங்கம்). கனகம் - பொன்; இதற்கு இரணியம் என்றும் ஒரு பெயர் உண்டு; பொன்னிறம் உள்ளவன் ஆதலால் பிரகலாதன் தந்தையாகிய அரக்கனை இரணியன் என்றார். கஞ்சன் - கண்ணபிரானுக்கு மாமன். சரம் - அம்பு. கவந்தன் - கபந்தன் என்னும் வடமொழிச் சிதைவு. துணித்தல் - அறுத்தல். கொண்டல் - ஆகுபெயர். முள்ளங்குடி - முல்லைநிலம். (சு ௩)

## முடுகுவிருத்தம்.

தங்குந் திருமறு மார்பன யோத்தித்
 தலைவன் பலவீமன்
றடவட மதுரைத் திருநக ராளன்
 றரைமகள் சானகிதன்
கொங்கைத் துணைவன் றசரத ராச
 குமாரன் வசுதேவன்
குலம்வரு முதல்வ னந்தன் மைந்தன்
 கோதைய சோதையிளஞ்
சிங்கங் கோசலை செல்வன் றேவகி
 சிறுவன் சனகையர்கோன்
றெய்வப் புதுமண வாளன் பஞ்சவர்
 செல்வச் சிறுதூதன்
பொங்குங் கடலிடை யறிதுயில் கூரும்
 புருடன் சங்குசரம்
பொருதண் டாழிவில் வாளுட னேந்தும்
 புனிதனை நினைவீரே.

(ப-ரை.) தங்கும் - தங்கிய, திரு மறு மார்பன் - இலக்குமியை யும் மறுவையும் உடைய மார்புடையவன், அயோத்தித்தலைவன் - அயோத்தியா நகரத்திற்கு அரசன், பலவீமன் - பலமுள்ள வீம சேனன், தடம் - பெரிய, வடமதுரை - வடமதுரையென்கிற, திருநக ராளன் - திருநகரத்தை ஆள்கின்றவன், தரைமகள் - பூமிதேவிக்கு மகளாகிய, சானகி-சீதையின், கொங்கை - தனத்திற்கு, துணைவன் - துணையாய் இருப்பவன், தசரத ராசகுமாரன் - தசரதமகாராஜாவின் புத்திரன், வசுதேவன் குலம் வரும் முதல்வன் - வசுதேவன் வமிசத் தில் அவதரித்த முதல்வன், நந்தன் மைந்தன் - நந்தகோபகுமாரன், கோதையசோதை - யசோதாபிராட்டியின், இளம் சிங்கம் - இளமை யுள்ள சிங்கம், கோசலை செல்வன் - கௌசல்யாதேவியின் புத்திரன், தேவகி சிறுவன் - தேவகி மைந்தன், சனகையர்கோன் - சனகராஜ னுக்கு, தெய்வம்-தெய்வத்தன்மையுள்ள, புதுமணவாளன்-புதிய மாப் பிள்ளை, பஞ்சவர்-பாண்டவர்க்கு, செல்வம்-வளமுள்ள, சிறு தூதன் - சிறு தூதுவன், பொங்கும் - பொங்குகின்ற, கடலிடை-பாற்கடலின் கண், அறிதுயில் கூரும் - அறிதுயில் செய்கிற, புருடன் - புருஷன், சங்கு - சங்கம், சரம் - அம்பு, பொரு தண்டு - போர்செய்கிற தண்டா யுதம், ஆழி - சக்கரம், வில் - தனுசு, வாள் - கட்கம், உடன் - ஆகிய இவைகளை ஒருங்கே, ஏந்தும் - தாங்குகிற, புனிதனை - பரிசுத்தனை, நினைவீர் - நினைக்கக்கடவீர், எ - று.

(வி - ரை) மறு உத்தமலக்ஷணமாகிய ஒருமச்சம். அறிதுயில்- உணர்வுகெடாத நித்திரை. (சூஅ)

வெண்பா.

வீறுங் கொடியும் வியனூர்தி யுங்கருடன்
கூறுமெழுத் தெட்டுடையான் கோபியர்மா—றேறுகின்ற
மாயவன் பின்னைசத்ய பாமை யுருக்குமணி
நேயன் றிருத்தா ணினை.

(ப - ரை.) வீறும் - மேலான, கொடியும் - துவசமும், வியன் - பெருமையுள்ள, ஊர்தியும் - வாகனமும், கருடன் - கருடனாகும், கூறும் - சொல்லப்படுகிற, எட்டெழுத்துடையான் - திருவட்டாக்கரத்தையுடையவன், கோபியர் மால் - கோபிசாஸ்திரீகளுக்கு மயக்கத்தை உண்டாக்குவோன், தேறுகின்ற - யாவரும் தேடுதற்கரிய, மாயவன் - மாயோன், பின்னை - பின்னைப்பிராட்டிக்கும், சத்யபாமை - சத்யபாமைக்கும், உருக்குமணி - உருக்குமணிதேவிக்கும், நேயன் - நேசமுள்ளவன், (அவனது) திருத்தாள் - திருவடியை, நினை - நினைக்கக்கடவை, எ - று.

(வி - ரை.) ஊர்தி - வாகனம் (ஏறி நடத்துதற்குரியது). கோபியர் - இடைப்பெண்கள். (கூக)

## பிரமன் பெருமை.

நினைக்கிலய னேறு நெடுங்கொடியு மன்ன
நனைக்கமலந் தாரிருப்பா நாட்டுந் — தனிப்படையே
தண்டமுந்நூ லாரந் தவளமலர் வாணிபவ
னொண்டொடியென் றுள்ளத் துணர்.

(ப - ரை.) நினைக்கில் - ஆலோசிக்குமிடத்தில், அயன் - பிரமனது, ஏறும் - வாகனமும், நெடுங்கொடியும் - நீண்ட துவசமும், அன்னம் - அன்னப்பறவையாகும்; நனை கமலம் - தாமரை அரும்பும் தாமரைமலரும், தார் இருப்பு ஆம் - மாலையும் ஆசனமும் ஆகும்; நாட்டும் - நிலைபெறுத்தப்பட்ட, தனி - ஒப்பற்ற, படை - ஆயுதம், தண்டம் - தண்டு ஆகும்; ஆரம் முந்நூல் - ஆரமாகவிருப்பது முப்புரி நூலாகும்; தவளம் மலர் - வெண்டாமரைமலரில் வாழ்கின்ற, வாணி - சரஸ்வதி, அவன் - அந்தப்பிரமனுக்கு, ஒண்டொடி என்று - மனைவி என்று, உள்ளத்து - மனத்தில், உணர் - நினைக்கக்கடவை, எ - று.

(வி-ரை.) அயன் - அஜஃ என்னும் வடசொற்றிரிபு. அன்னம்-ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபு. தண்டம்-வடசொல்; பகைவரை தண்டித்தற்குரியது. தவளம் - வடசொற்றிரிபு. வாணி - வடசொல். ஒண்டொடி-அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இருப்பு - இருப்பிடம் (ஆசனம்). (எ0)

இந்நூன் முறை.

உணரும் படியே யுரைத்தவற்றை யெல்லா
மிணர்மென் றொடையா மியல்பாற்—றுணையெழுத்தாற்
சொல்லாயச் சொல்லின் றொகுதி தனைத்தொடுக்க
வல்லார்க் கணிபெறலா மால்.

(ப-ரை.) உணரும்படியே - (யாவரும்) அறியும்படியாகவே, உரைத்தவற்றையெல்லாம் - சொன்னவற்றையெல்லாம், இணர் - பூங்கொத்துப்போன்ற, மெல் தொடை ஆம் இயல்பால் - மெல்லிய மாலைபோன்ற தன்மையால், துணை எழுத்தால் - இரண்டெழுத்தாலாகிய, சொல்லாய் - மொழியாகி, அச் சொல்லின் தொகுதிதனை - அந்தச் சொல்லின் கூட்டத்தை, தொடுக்க வல்லார்க்கு - தொடுக்க வல்லவர்களுக்கு, அணி பெறல் ஆம் - எல்லா அழகும் பெறக்கூடும், எ - று.

(வி - ரை.) தொடை - தொடுக்கப்படுவது. துணை - இரண்டு. ஆல் - ஈற்றசை. (எக)

இரத்தினச்சுருக்கம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

---

☞ குறிப்பு: பழைய பிரதிகளுக்குள்ளே சிலவற்றுள் உஅ-பாடல்களும், சிலவற்றுள் எக - பாடல்களும் இருக்கிறபடியால் அவ்வேறுபாடு தோன்ற நடுவே கீற்று வைக்கப்பட்டிருக்கிறது.

உ

சிவமயம்.

# உவமானசங்கிரகம்,

# இரத்தினச் சுருக்கம்

இவற்றின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

# அரிச்சந்திரபுராண வசனம்.

## கிலிட்டு பயிண்டு: விலை ரூபா 1-8-0.

இப்போது புதிதாக வெளிவந்திருக்கும் அரிய தமிழ் நூலாகிய அரிச்சந்திரனுடைய இப்புண்ணிய சரித்திரமானது, உலகத்தோரனைவர்க்கும் அறிவை விருத்தி செய்யத்தக்க பண்டைக்காலத்து நீதிக் கதைகளுள் முதன்மைபெற்றது. இது சத்தியத்தின் உயர்வையும், கற்பின் சிறப்பையும் தெளிவாக விளக்கிக் காட்டக்கூடியதென்பது எவர்க்கும் நன்கு விளங்கிய விஷயம். இவ்வாறு உயர்வுகூடியதாயிருப்பதை முன்னிட்டு இச்சரித்திரம் பல பாஷைகளிலும் அவ்வப் பாஷைகளை யுணர்ந்த பண்டிதர்களால் நாடகங்களாகவும், நாவல்களாகவும் அமைக்கப்பட்டு, எல்லோராலும் கொண்டாடப்பெற்று வருகின்றது. இச்சரித்திரத்தைத் தமிழில் இனிய செய்யுள்களால் நெல்லூர் வீரனென்னும் ஆசுகவிராஜர் புராணஞ் செய்திருப்பதோடு, இன்னும் பல சங்கீத சாகித்திய வித்வான்கள் பல நாடகங்களாகவும் இயற்றியிருக்கின்றனர். ஆயினும், மற்ற இதிகாச புராணங்களுக்கு மூல நூல்களைத் தழுவிய வசனங்கள் ஏற்பட்டிருப்பதுபோல், இவ்வினிமையான அரிச்சந்திரபுராணத்தின் செய்யுட் கருத்துக்களைத் தழுவிய வசன மொன்றில்லாமையால், இலக்கிய இலக்கணப் பயிற்சியுள்ள கல்விமான்கள் தவிர ஏனையோர் இத்திவ்விய சரித்திரத்தை எப்போதும் வாசித்து நற்பயனை அடைவதற்குக் கூடாமையாயிருக்கின்றது. ஆகவே, அவ்வாறின்றி எக்காலத்தும் எத்தகையினரும் எளிதில் வாசித்துணர்ந்து நல்லறிவையும், நற்பயனையும் அடைதற் குபயோகமாயிருக்கும்பொருட்டு, இப்போது அரிச்சந்திரபுராணச் செய்யுட் கருத்துக்களைத் தழுவி இவ்வசனம் எழுதி வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. வாசிப்பவர் மனத்தை உருக்கத்தக்க அரிச்சந்திர புராணச் செய்யுட் கருத்துக்களையே பெரும்பாலுந் தழுவி இவ்வசனம் எழுதப்பெற்றிருப்பதால், சரித்திரப்போக்கானது மிகவும் உருக்கமுடையதாகவும், இனிமையை விளைவிப்பதாகவு மிருக்கும். மேலும், இது இக்காலத்தில் அசப்பியமெனக் கருதப்படும் விசேஷ ஸ்திரீ வருணனைகளை யெல்லாம் நீக்கி எளிய நடையில் விளக்கமாகவும், விரிவாகவும் எழுதப்பெற்றிருப்பதால், கல்விகற்கும் மாணவர், ஸ்திரீகள் முதலிய எல்லோருமே வாங்கி வாசித்துப் புத்தியை விருத்தி செய்து கொள்ளத்தக்க சிறந்த நூலாகும்.